# உரிமையுரை

நெல்லையம்பதியின் நல்லணியாய்த்

திகழும்

திரு **T. M.** நெல்லையப்ப பிள்ளை, B. A.

*(Retired Registrar of Assurances)*

அவர்களின்

பெருந்தகைமைக்கும் நட்பாம் கிழமைக்கும்
இந்நூலை உரிமையாக்குகின்றேன்.

பா. நடராஜன்



திரு T. M. நெல்லையப்ப பிள்ளை, B. A.

*(Retired Registrar of Assurances)*

# முன்னுரை

ஏறக்குறைய இரண்டாண்டுகட்கு முன்னே இந்நூல் எவ்வித முன்னுரையுமின்றி வெளிவந்தது. இச்சிறு கால எல்லையுள் மிகப் பெரிய மாறுதல்கள் உலகில் நடந்துள்ளன. அவை இந்தியத் தொழில் வளர்ச்சியைப் புரட்சிகரமான முறையில் பாதித்துவிட்டன. வாடிக்கிடந்த குடிசைத் தொழில்கள் எதிர்பாராத வளமெய்தின. வாழ்க்கையின் ஆக்கம் கருதி உழைத்த ஆலைகள் பல இப்பொழுது அழிக்கும் போர்க்கருவிகளை வடித்து நிற்கின்றன. எண்ணற்ற புதுத் தொழிற்சாலைகள் நாள்தோறும் தோன்றுகின்றன. ஏற்றுமதி இறக்குமதிகளின் குறிக்கோள்கள் வேறுயின. அகவிலைகள் வானளாவச் செல்கின்றன. அவற்றை மட்டுப் படுத்த அரசாங்கத்தினர் பெரும்பாடு படுகின்றனர். மதிநலம் நூலோடுடைய திவான் பகதூர் சர். ஆர்க்காடு இராமசாமி முதலியார் (K. C. S. I.) நிறுவிய விஞ்ஞானத் தொழில் ஆராய்ச்சிக் கழகம் (Board of Scientific and Industrial Research) நாட்டுத் தொழில் வளர்ச்சிக்கு இன்றியமையாப் பல புதுமைகளைக் கண்டு கொண்டிருக்கின்றது. இடையருது நிகழும் மாறுதல்களுக்கிடையே இவற்றை விரிக்க முயல்வது சுழலும் திகிரியில் மட்கல உருவை முற்றக்காண முயல்வதை ஒக்கும்.

தமிழ் மொழியின் கலைவளம்பெருக்கக்கருதி, சென்னைப் பல்கலைக் கழகத்தார் இந்நூலுக்கு ஒரு தனிப் பரிசளித்து உதவினர். அவர்களுக்கு மனமார்ந்த நன்றி செலுத்துகின்றேன்.

சென்னை, அர்ச். கப்ரியேல் கல்லூரித் தமிழாசிரியர் வித்வான். பா. சொக்கலிங்கனர் இப்பதிப்பினை வெளியிடும் முயற்சியில் எனக்குச் செய்த உதவியைப் பாராட்டுகிறேன்.

ரிஷிபவான்
தரியாகஞ்சு, டில்லி
5—12—'42

பா. நடராஜன்

# பொருளடக்கம்

# இந்திய நாட்டின்
# தொழில் வளர்ச்சி


பா. நடராஜன்

பொருளாதார ஆசிரியர்

மதுரை திரவியம் தாயுமானவர் இந்து கலாசாலை

திருநெல்வேலி



PUBLISHED BY

ஹிலால் பிரஸ், திருநெல்வேலி

1944


[ விலை ரூ. 1—4—0

# உரிமையுரை

நெல்லையம்பதியின் நல்லணியாய்த்

திகழும்

திரு T. M. நெல்லையப்ப பிள்ளை, B. A.

*(Retired Registrar of Assurances)*

அவர்களின்

பெருந்தகைமைக்கும் நட்பாம் கிழமைக்கும்
இந்நூலை உரிமையாக்குகின்றேன்.

பா. நடராஜன்



திரு T. M. நெல்லையப்ப பிள்ளை, B. A.
*( Retired Registrar of Assurances )*

# முன்னுரை

ஏறக்குறைய இரண்டாண்டுகட்கு முன்னே இந்நூல் எவ்வித முன்னுரையுமின்றி வெளிவந்தது. இச்சிறு கால எல்லையுள் மிகப் பெரிய மாறுதல்கள் உலகில் நடந்துள்ளன. அவை இந்தியத் தொழில் வளர்ச்சியைப் புரட்சிகரமான முறையில் பாதித்துவிட்டன. வாடிக்கிடந்த குடிசைத் தொழில்கள் எதிர்பாராத வளமெய்தின. வாழ்க்கையின் ஆக்கம் கருதி உழைத்த ஆலைகள் பல இப்பொழுது அழிக்கும் போர்க்கருவிகளை வடித்து நிற்கின்றன. எண்ணற்ற புதுத் தொழிற்சாலைகள் நாள்தோறும் தோன்றுகின்றன. ஏற்றுமதி இறக்குமதிகளின் குறிக்கோள்கள் வேறாயின. அகவிலைகள் வானளாவச் செல்கின்றன. அவற்றை மட்டுப் படுத்த அரசாங்கத்தினர் பெரும்பாடு படுகின்றனர். மதிநலம் நூலோடுடைய திவான் பகதூர் சர். ஆர்க்காடு இராமசாமி முதலியார் (K. C. S. I.) நிறுவிய விஞ்ஞானத் தொழில் ஆராய்ச்சிக் கழகம் (Board of Scientific and Industrial Research) நாட்டுத் தொழில் வளர்ச்சிக்கு இன்றியமையாப் பல புதுமைகளைக் கண்டு கொண்டிருக்கின்றது. இடையறாது நிகழும் மாறுதல்களுக்கிடையே இவற்றை விரிக்க முயல்வது சுழலும் திகிரியில் மட்கல உருவை முற்றக்காண முயல்வதை ஒக்கும்.

தமிழ் மொழியின் கலைவளம்பெருக்கக்கருதி, சென்னைப் பல்கலைக் கழகத்தார் இந்நூலுக்கு ஒரு தனிப் பரிசளித்து உதவினர். அவர்களுக்கு மனமார்ந்த நன்றி செலுத்துகின்றேன்.

சென்னை, அர்ச். கப்ரியேல் கல்லூரித் தமிழாசிரியர் வித்வான். பா. சொக்கலிங்கனார் இப்பதிப்பினை வெளியிடும் முயற்சியில் எனக்குச் செய்த உதவியைப் பாராட்டுகிறேன்.

ரிஷிபவான்
தரியாகஞ்சு, டில்லி
5—12—'42

பா. நடராஜன்

# பொருளடக்கம்

# 1. தொழில் வளர்ச்சியின் அவசியம்

" உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாம்
தொழுதுண்டு பின் செல்பவர் "

என்றார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே தெய்வத் திருவள்ளுவர். அன்று முதல் சமீப காலம் வரையில் இந்தக் கொள்கை நம் நாட்டில் நிலவி வந்துள்ளது. அதன் பயனாக இன்று இந்திய மக்களுள் நூற்றுக்குத் தொண்ணூறு பேர் விவசாயிகளாய் இருக்கின்றனர். இந்த நிலைமை ஏற்படுவதற்கு மற்றொரு காரணமும் உண்டு. இந்திய நாட்டுக் கைத்தொழில்கள் சென்ற நூற்றைம்பது வருடங்களுக்குள் பற்பல காரணங்களால் அழிந்து பட்டன. தொழிலை இழந்த தொழிலாளர் வாழ்க்கைக்கு வேறு வழியில்லாது விவசாயத்தையே நாடினர்.

பெரும்பாலார் உழுதுண்டுவாழ முற்பட்டதனால் நாட்டில் வறுமை அதிகரித்தது. பஞ்சம், கொள்ளை நோய் முதலியன நேர்ந்த காலங்களில் விவசாயம் ஒன்றையே நம்பி வாழ்ந்த இந்த மக்கள் மிகவும் வருந்தினர். எனவே உழவோடு தொழிலும் ஒருங்கே தழைத்தால்தான் நாட்டின் ஏழைமை தீர்ந்து பொருளாதார நிலை செம்மையுறும்.

"உழுதுண்டு வாழ்வதற்கு ஒப்பில்லை" என்ற கொள்கை தற்கால உலகுக்குப் பொருந்தாது. செல்வத்தில் இன்று சிறந்து விளங்கும் நாடுகளெல்லாம் தொழில் வளர்ச்சியால் சிறந்து நிற்கின்றனவேயன்றி விவசாயத்தால் அன்று. வெவ்வேறு வகைப்பட்ட மனிதர்களுடைய ஆற்றலுக்கும் இயற்கைக்கும் பொருத்தமான முறையில் தொழில்கள் விரிவடைந்தால் அன்றி நாட்டின் பொருளாதார நிலை நலனடையமாட்டாது. இன்று படித்த மக்களிடையே வேலையில்லாத் திண்டாட்டம் உண்டாயிருப்பதற்கும் விவசாயிகளிடையே அரைவேலை கால்வேலை இருப்பதற்கும் காரணம் போதிய தொழில்கள் இல்லாமையே.

தொழில்கள் வளர்ச்சியடைந்தால் விவசாயத்தை மக்கள் கவனிக்க மாட்டார்கள் என்ற ஒரு ஆட்சேபனையைச் சிலர் எழுப்புகின்றார்கள். அது பொருந்தாது. இங்கிலாந்தில் பதினெட்டாம் நூற்றாண்டில் வாணிபமும் கைத்தொழிலும் தலையெடுத்துப் புதுப் பொருள் படைத்தவர் பலர் தோன்றிய போதுதான் விவசாயமும் தலை யெடுத்தது; பல அரிய முன்னேற்றங்களும் நடைபெற்றன. இன்று இந்திய விவசாயம் சீர்கேடான நிலைமையில் இருப்பதற்குத் தலைசிறந்த காரணம் விவசாயிகளிடம் போதிய பொருள் இல்லாமையே யாகும். இரசாயன எருக்களைப் போடுவதற்கும், இயந்திரக் கலப்பைகளை உபயோகிப்பதற்கும், உயர்ந்த ஜாதி மாடுகளை

வாங்குவதற்கும் நம்முடைய விவசாயிகள் இயலாத நிலையில் இருக்கின்றனர்; அம்மட்டோடு நில்லாமல் கடன் குழியிலும் ஆழ்ந்திருக்கின்றனர். இவை யெல்லாம் மறைந்து விவசாயத்தில் மக்கள் அதிக மூதல் போடவேண்டுமானால் நாட்டிற் செல்வம் பெருகவேண்டும். அதற்குத் தொழில் வளர்ச்சியே தகுந்த கருவியாகும்.

அன்றியும் தொழில்கள் வளருமானல் அவை களுக்காகப் பற்பல விவசாய மூலப்பொருள்கள் தேவையாயிருக்கும். தேவை மிகவே, அந்த மூலப் பொருள்களுக்கு நல்ல விலையும் கிடைக்கும். எனவே தொழில் வளர்ச்சியினல் விவசாயம் மேம் படுமேயொழியத் தாழ்வடையாது. கரும்பு, நிலக் கடலை, பருத்தி முதலிய விவசாயப் பயிர்களின் சரித்திரமே இதற்குச் சான்று. தொழில் வளர்ச்சி யினல் விவசாயத்துக்கு ஆளில்லாமல் போய்விடும் என்ற அச்சமும் வேண்டுவதில்லை. இப்பொழுது பல பெருந்தொழில்கள் தோன்றியுள்ளன. எனினும் நூற்றுக்கு ஒன்று வீதம்தான் அவற்றில் மக்கள் வேலைசெய்து வருகிறார்களென்று புள்ளி விவரங் களால் புலனாகிறது. எனவே பெருந்தொழில்கள் ஏற்படுவதினல் சுமார் 40 கோடி மக்களைக்கொண்ட இந்திய நாட்டில் விவசாயத்துக்கு ஆள் முட்டுப்பாடு ஏற்பட்டுவிடாது. அங்ஙனமானல் வேலையில்லாமை மட்டும் ஒழியுமோ என வினவலாம். பெருந்தொழில் களின் வளர்ச்சியால் மட்டும் பெருவாரியான

மக்களைக்கொண்ட நாட்டுக்குப் பொருளாதார விமோசனம் வந்துவிடாது. அந்தப் பிரச்னையைத் தீர்க்க எண்ணில்லாத குடிசைத் தொழில்கள் தோன்றவேண்டும். பன்னிரண்டு மாதங்களில் நான்கு மாதம், ஐந்து மாதம் மட்டும் வயல்களில் வேலை செய்துவிட்டு எஞ்சிய பொழுதெல்லாம் வேலை காணாது வருந்தும் இந்திய விவசாய மக்களுக்கு வேண்டுவது குடிசைத்தொழில் வளர்ச்சியாகும். பேராலைகள் தோன்றுவதால் இவர்கள் பொருளாதாரப் பிரச்னை நேரடியாகத் தீர்ந்துவிடப் போவதில்லை. காந்தியடிகளின் சர்க்கா இயக்கத்தின் பொருளாதாரக்குறிப்பும் சிறப்பும் இதுவேயாகும்.

இந்தக் குடிசைத் தொழில்களையும் நவீன முறையிற் செய்வதற்கு அண்மையில் பல வசதிகள் ஏற்பட்டு வருகின்றன. மின்சார சக்தியின் பெரும் பயனை அறிந்த பிறகு, மிகக் குறைந்த செலவில் அதனைக் குக்கிராமங்கள் தோறும், குடிசைகள் தோறும் கொண்டுவருவது இயலும் என்று கண்ட பிறகு, தொழில் முறையிலேயே ஒரு பெரும் புரட்சி ஏற்பட்டு வருகின்றதென்று சொல்லலாம். ஆலைகளில் பல்லாயிர மக்கள் திரண்டு வருந்திச் செய்த பல பண்டங்களை மின்சாரத்தின் உதவியால் எளிதில் குடிசைகளிலேயே ஓய்வு நேரங்களில் மக்கள் செய்யக்கூடும். இங்ஙனம் செய்யப்பட்ட வெவ்வேறு பொருள்களை ஒன்றிப்பதற்கும், விற்பனை செய்வதற்கும் மட்டும் ஆலைகள் வேண்டுமேயன்றி, உற்பத்திக்கு

வேண்டுவதில்லை. இவ்வாறு வருங்காலத்தில் பல தொழில்கள் செய்யக்கூடும். எனவே தொழில் வளர்ச்சி என்றால் தற்போது நடந்துவரும் ஆலை முறையில் ஏற்படும் வளர்ச்சிதான் என்று கருதிக் கண்டிக்க முற்படலாகாது.

" இயந்திரம் ஒரு பைசாசம்; அது மனிதனின் ஆன்மாவையே அமுக்கி நசுக்கி விடுகின்றது. அவனை அடிமை கொள்கின்றது. பச்சிளம் பாலரின் உடல் நலனை உறுஞ்சுகின்றது. சமூகத்திலே முதலாளி தொழிலாளி என்ற பிரிவினையைக் கற்பித்துப் பூசல் விளைக்கின்றது. புரட்சிக்கு ஒரு வித்தாகின்றது. நாட்டுப்புறங்களின் இயற்கை நலங்களைக் குலைக்கின்றது. நகரங்களிலே நரகத்தையொத்த சுகாதாரமற்ற தொழிலாளர் இருப்பிடங்களைத் தோற்றுவிக்கின்றது " — என்றெல்லாம் தற்காலத் தொழில் முறையைப் பல அறிஞரும் தாக்குகின்றனர். இவையெல்லாம் உண்மை என்றே வைத்துக் கொண்டாலும், இயந்திரமுறையை — அதிலும் தற்கால முதலாளி மாரிபத்திலிருக்கும் — இயந்திர முறையை ஆட்சேபிப்பதேயன்றித் தொழில் வளர்ச்சியை அன்று. இவரும் தொழில் வளர்ச்சி நாட்டுக்கு இன்றியமையாததென்பதை ஒப்புக்கொள்கின்றனர்.

ஆனால் இயந்திர வளர்ச்சி உண்மையில் இத்துணை அரக்கத்தன்மை வாய்ந்ததா? அவ்விதம்

கூறுவோர் அதனால் விளையும் நற்பலன்களைக் கவனிக்கின்றார்களா? எப்பொருளையும் "காய்தல் உவத்தல் அகற்றி" நோக்குவதே அறிவுடைமை யாகும். இன்று நாகரிகத்தின் உச்ச நிலையில் உள்ளனவென்று சொல்லப்படும் நாடுகள், செல்வத்தின் சிகரம் என்று போற்றப்படும் நாடுகள் இயந்திரத் தொழில்களைப் பலவாறாகப் பெருக்கி மிகுந்துள்ள நாடுகளே. நவீனத்தொழில்முறை மக்களின் அறியாமையை அகற்றுகின்றது; குருட்டு நம்பிக்கைகளை விரட்டியடிக்கின்றது; மூட வழக்கங்களை ஓட்டுகின்றது; தேசிய உணர்ச்சியை ஊட்டுகின்றது; பட்டணங்களும் நகரங்களும் எவ்வளவுதான் வெறுக்கத்தக்கனவாயினும் அவை நாகரிகச் சுடர்கள் என்பதை எவரும் மறக்கமுடியாது. ஆலைகளிலே தொழிலாளர் கற்கும் பல பழக்க வழக்கங்களும் கட்டுப்பாடும் மனிதரின் சிந்தையையும் செயலையும், நாளடைவில் மிகு நுண்ணிய முறையில் உருப்படுத்துகின்றனவென்பது திண்ணம். நவீனத் தொழில் முறையால் வரும் நாகரிக மனப்பான்மை, புதுவேகம், மறு மலர்ச்சி முதலியவற்றை ரூபா அணுக் கணக்கில் அளவிட முடியாது.

இன்று மேலை நாடுகளிலும், கீழ் நாடுகளிலும் தேசியம் என்ற உணர்ச்சி பொங்கித் ததும்பிப் பூரணமாய் நிற்கின்றது. ஜர்மனி முதலிய தேசங்களில் அவ்வெள்ளம் கட்டுக்கடங்காமல் எழுந்து

கரைகளை உடைத்துக்கொண்டு நாசமென்னும் கடலை நோக்கிப் பாய்கின்றது. இதனால் உலக யுத்தங்கள் நிகழ்கின்றன. இத்தகைய சந்தர்ப்பங்களில், தொழில் வளர்ச்சி குறைந்த நாடுகள் திணறி விடுகின்றன. இயற்கை மூலப்பொருள்களை மட்டும் விளைவித்து ஏற்றுமதி செய்துவிட்டுக் கைத்தொழிற் பொருள்களுக்கு இறக்குமதியை எதிர்பார்த்துக் கொண்டிருப்பது அறியாமையின்பாற்படுமென்று சென்ற (1914—18) மகா யுத்தத்தின்போது இந்திய மக்கள் கண்கூடாக அறிந்து கொண்டார்கள். ஒவ்வொரு தேசத்திலும் அதற்கு வேண்டிய இன்றியமையாத அடிப்படையான தொழில்கள் கண்டிட்பாக அமைந்தே யாகவேண்டும். இதுவே இன்று தேசீய உணர்ச்சி பெற்ற தேசங்களின் இலட்சியமாக இருக்கின்றது. இந்த இலட்சியத்தை எய்துவதற்கு அவை பல முறைகளையும் கையாண்டு தொழில்களை வளர்க்கின்றன. தந்தேசம் எந்தேசம் என்ற வரையறைப்பட்ட உணர்ச்சி உலகத்தை இயக்குமளவும், மக்கள் யாவரும் பலவிதத் தொழில்களையும் தத்தம் தேச எல்லைக்குள் மேலும் மேலும் வளர்த்துக் கொண்டுதானிருப்பார்கள். இங்ஙனம் செய்வதில் இழுக்கொன்றுமில்லை; வெறும் தற்காப்பு முறையேயாகும். பிரிட்டிஷ் சாம்பிராஜ்யம் ஒரு தனி அரசியல் வகை என்று கருதுகின்றவர்களும் இந்த இலட்சியத்தைக் கொண்டவர்களாகவே இருக்கிறார்கள்.

ஒவ்வொரு நாடும் தன் பொருளாதார நிலையை உயர்த்த வேண்டும் என்ற கருத்தை எழுப்புவதும் இந்தத் தேசீய உணர்ச்சியே. அதன் பயனாக அரசாங்கங்கள் தொழில்களைப் பெருக்குகின்றன; உற்பத்தியை மிகுதியாக்குகின்றன; ஆக்கிய பண்டங்களை ஏனைய நாடுகளில் விற்க முனைகின்றன. தொழில் வளர்ச்சி இல்லாத் தேசங்களே அவர்களுக்கு ஏற்ற சந்தைகளா யமைகின்றன. அந்த நாட்டு மக்களை இந்த வியாபார முறையால் சுரண்டுகிறார்கள். இந்த சுரண்டலுக்காகச் சுதந்தர நாடுகளைக் குடியேற்றத் (colony) தேசங்களாகவும் வல்லரசுகளைச் சிற்றரசுகளாகவும் உருத்தரிக்கின்றார்கள். அத்தேசங்களுக்காக ஒருவரோடொருவர் போர் புரிகின்றனர். இவற்றால் தொழில் வளர்ச்சியை மேற்கொள்ளாத நாட்டிற்குச் சூத்திரப் பொம்மை போல் ஆடிக்கொண்டிருக்கும் நிலை ஏற்பட்டு விடுகிறது.

எனவே தொழில் வளர்ச்சியால் அன்னியரின் சுரண்டலுக்கு இடங்கொடுக்காமலிருப்பதோடு, யுத்த காலம் போன்ற அசாதாரண வேளைகளில் அச்சமின்றி வாழ இயல்வதோடு, இந்தியாவைப் பொறுத்தவரையில் பிரிட்டிஷ் சாம்பிராஜ்யத்துக்கே உபகார முண்டென்றும் சொல்லலாகும். எவ்வாறெனில், நெருக்கடியான காலங்களில் இந்தியப் பொருள்கள் அங்கு ஏற்றுமதியாகி உதவிபுரியக் கூடும். இது எம்மட்டு உண்மை என்பதைத்

தற்போது நடக்கும் விஷயங்களிலிருந்து அறிந்து கொள்ளலாம். இன்று இங்கிலாந்துக்கு யுத்தத் துக்கு வேண்டிய பல இன்றியமையாத பொருள்கள் இங்கிருந்து ஏற்றுமதியாகின்றன. துப்பாக்கிகள், குண்டுகள், வெடிமருந்துகள், இரசாயனப்பொருள் கள், இன்னும் இவைபோன்ற போருக்கு வேண்டிய தளவாடங்கள் பல இங்கிருந்து போகின்றன. ஆகாய விமானங்கள் கூட இங்கேயே செய்வதற்கு வேண்டிய முயற்சிகள் மேற்கொள்ளப்படுகின்றன. சென்ற சில ஆண்டுகளாகத் தொழில் வளர்ச்சியை மேற்கொள்ள இந்தியா அனுமதிக்கப்பட்டதனு லன்றோ இங்ஙனம் சாம்பிராஜ்யத்துக்கு உற்றுழி உதவ இயன்றது ?

மேற்கூறியவற்றால், தொழில் வளர்ச்சி எவ் வாற்றானும் இன்றியமையாததொன்று ; அது நன் றாதலால் இன்றே செய்யவேண்டுவதொன்று : இன்றும் இன்னே செய்யவேண்டுவதொன்று— என்பது வெள்ளிடை. அங்ஙனமாயின் இதுகாறும் ஏன் அது தடைப்பட்டது ?

இதற்கு விடை ஒரு பெரிய கதை. அந்தக் கதைக்குப் பல வியாக்கியானங்களும் உண்டு. மன்னர் மன்னனும் ஔரங்கசீப் மாண்டபின்னர் மூகலாய ஆட்சி வீழ்ந்தது. அன்று முதல் இந்தியக் கைத்தொழில்களும் தேயத் தொடங்கின. தொழி லாளர் கைவன்மைக்குச் சான்றாக எழில்மிகுந்த பண்டங்களை உற்பத்தி செய்து, மேலை நாடுகளுக்கு

ஏற்றுமதி செய்து கொண்டிருந்த இந்தியத் தொழில் ஆதரிப்பாரின்றிச் சோர்வுற்றது. நாட்டில் நிகழ்ந்த அரசியற் குழப்பங்களும், "குடை நிழலிருந்து குஞ்சர மூர்ந்தோர்" குப்புற வீழ்ந்த கோலமும் நாட்டுத் தொழில்கள் நாசமுறும் காலத்தைக் குறித்தன.

ஆனால் இவற்றுக்கெல்லாம் மேலாக ஐயாயிர மைல்களுக்கப்பாலிருந்து அதிவேகமாக ஒரு சக்தி பிறந்து நாட்டுத் தொழில்களைக் கூட்டோடு தாக்கியது. அதுவே, "இயந்திர புரட்சி" (Industrial Revolution) எனப்படும். புத்தப்புதிய இயந்திரங்கள் இங்கிலாந்தில் மெத்தத் தோன்றி, முன்னர் மக்கள் கைவருந்தி மெய்வருந்திச் செய்த வேலைகளை விரைவில் எளிதில் செய்து முடித்தன. இயந்திரச் சரக்குகளுக்கு எதிரே நாட்டுச் சரக்குகள் நிற்க முடியவில்லை. ஆதலால் இந்தியத் தொழில்கள் அழிந்துபட்டன. இது பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் நிகழ்ந்தது.

பிரிட்டிஷ் அரசாங்கத்தின் ஆட்சியில் வெகு காலம்வரை தொழில் வளர்ச்சிக்கு வேண்டிய எவ்வித முயற்சியும் மேற்கொள்ளப்படவில்லை. அந்த நாளில் பிரிட்டிஷார், வியாபாரம் தொழில் முதலிய விவகாரங்களில் அரசாங்கம் கூடியவரை தலையிடாதிருக்க வேண்டுமென்ற கொள்கையைக் கடைப்பிடித்து வந்தனர். அதனை அவர்கள் இங்கிலாந்தில் வற்புறுத்தியதுபோலவே இந்தியாவிலும்

வற்புறுத்தினர். ஆதலால் தொழில் வளர்ச்சிக்கு அரசாங்க ஆதரவு கிடைக்கவில்லை. நாட்டிலுள்ள பிரமுகர்களும் முன்வரவில்லை. 'கோனைக்கி வாழும் குடி' என்ற முதுமொழியை அவர்கள் பொய்க்க முயலவில்லை. ஆயினும் பம்பாயில் ஒரு சில பருத்தி மில்களும், வங்காளத்தில் சில சணல் மில்களும் தோன்றின. தாதாபாய் நௌரோஜி, ரானடே முதலிய தேசபக்தர்கள் அரசாங்கத்தின் பராமுகப் பான்மையைக் கண்டித்தனர். 1880-ல் வந்த பஞ்சக் குழுவினரும் தொழில் வளர்ச்சிக்குறைவினால்தான் அடிக்கடி பஞ்சங்கள் உண்டாகின்றன என்றுஅறிவுறுத்தினர். இருந்த இடம் தெரியாத ஜப்பான் அதிவேகமாகத் தொழில் வளர்ச்சி அடைவதைக் கண்ட இந்தியத் தலைவர்கள் விழிப்படைந்தனர். 1905-ல் சுதேசி இயக்கம் பிறந்தது. அன்றெழுந்த பகிஷ்காரத்தால் அரசாங்கத்தார் மனம் இறுகினதேயொழிய இளகவில்லை. இங்ஙனமாகச் சென்ற யுத்தகாலம் வரையில் இந்தியத் தொழில்கள் ஏற்ற வளர்ச்சியை அடையவில்லை. பின்னர் சிறிது வளர்ச்சி ஏற்பட்டுள்ளது. ஆனால் அந்த வளர்ச்சியும் ஒரு விந்தை வளர்ச்சியே. அடிப்படையான இரும்பு, எஃகு, இயந்திர உற்பத்தி, இரசாயனப்பொருள் உற்பத்தி முதலிய தொழில்களை முதலில் தொடங்காமல் இந்தியத் தொழில் வளர்ச்சி தலையிலிருந்து அடியை நோக்கிச் சென்றுகொண்டிருக்கின்றது!

இந்த மாறுபட்ட வளர்ச்சியே தொழில் முன்னேற்றத்திற்கு முட்டுக்கட்டையாக அமைந்துவிட்டது. எந்தத் தொழிலைத் தொடங்க வேண்டுமானாலும் இயந்திரங்களுக்கு இறக்குமதியன்றி வேறுகதியில்லை என்ற நிலையிருந்தால் தொழில் வளர்ச்சி விரைவில் நடைபெறுவதெங்ஙனம்? அதோடு, தொழில்களைத் திறம்பட, ஒழுங்குபெற நடத்தத் தக்க தலைவர்கள் நாட்டிலில்லை. அனுபவமற்றவரும், புரட்டர்களுமான பலர் ஆரம்பத்தில் தொழில்களைத் தொடங்க முன்வந்து மக்களை ஏமாற்றிச் செல்லவே, கூட்டுக்கம்பெனிகளில் பணத்தைப் போடுவதற்கோ, அல்லது பங்கெடுப்பதற்கோ பெரும்பாலாருக்குப் பயமும் அவநம்பிக்கையும் ஏற்பட்டு விட்டன. தொழில் வளர்ச்சிக்குத் தடை வேறென்ன வேண்டும்?

---

# 2. மூலப் பொருள்கள்.

ஒரு நாடு தொழில் வளர்ச்சி அடைய வேண்டுமானல் நான்கு சாதனங்கள் இன்றியமையாதன: 1. மூலப்பொருள்; 2. மூலதனம்; 3. ஆக்குவோர்; 4. வாங்குவோர்.

மூலப்பொருள் ஆவன பெரும்பாலும் இயற்கை விளை பொருள்களே. ஆயினும் சிறு பான்மையாகச் செயற்கைப் பண்டங்களும் சில தொழில்களுக்கு மூலப்பொருளாய் அமைவதுண்டு. உதாரணமாக ஆளி விதையை எடுத்துக்கொள்வோம். ஆளி எண்ணெய் செய்வதற்கு இது மூலப்பொருளாய் இருக்கின்றது. ஆதலால் ஆளிவிதையை இயற்கைப் பொருளாகவும், எண்ணெய்யைச் செயற்கைப் பொருளாகவும் கருதலாம். ஆனல் செயற்கைப் பொருளான இந்த எண்ணெயே பல சாயங்களுக்கும், வார்னிஷ் முதலியவற்றிற்கும் மூலப்பொருளாக அமைகின்றது. இவ்வாறே மேலும் பார்ப்போமானல் செயற்கைப் பொருள்களான இந்தச் சாயங்கள் பின்னும் பல தொழில்களுக்கு மூலப்பொருள்களாய் அமைகின்றன. இவ்வாறு படிப்படியாகப் பார்த்துக்கொண்டே போனல் எதுதான் மூலப் பொருள், எதுதான் செயற்கைப் பொருள் என்று வரையறுக்க முடியாமற் போய்விடும். ஆகவே

பொதுவாகத் தொழில் வளர்ச்சிக்கு இன்றியமையாத அடிப்படையான இயற்கைப் பொருள்களே மூலப்பொருள் என்னும் பெயரால் இந்நூலிற் குறிக்கப்படும்.

இவ்வியற்கைப் பொருள்களைத் தாதுப் பொருள்கள், தாவரப்பொருள்கள், விலங்குப்பொருள்கள் என மூவகையாகப் பிரிக்கலாம். தாவரப்பொருள்களுள்ளே விவசாயப்பொருள்களும் உண்டு; காட்டுப் பொருள்களும் உண்டு. பருத்தி, சணல், எண்ணெய் விதைகள், கரும்பு, ரப்பர் முதலிய விவசாயப் பொருள்கள் தொழில் வளர்ச்சிக்கு மிகச் சிறந்தவை. இவற்றுள் மிகவும் முக்கியமானது பருத்தியாகும்.

## தாவரப்பொருள்கள்.

பருத்தி : ஆண்டொன்றுக்கு இருநூறு கோடி ராத்தல் பருத்தி இந்தியாவில் சாகுபடியாகின்றது. உலகத்திலேயே ஐக்கிய அமெரிக்காவுக்கு அடுத்த படியாக இந்தியா பருத்தி உற்பத்தியில் சிறந்ததென்று சொல்லலாம். இதில் சுமார் முக்கால் பாகம் பம்பாய் மாகாணத்தில் மட்டும் சாகுபடியாகிறது. மொத்த விளைவில் பாதி உள்நாட்டிலேயே பயன் படுத்தப்படுகிறது. எஞ்சிய பாதி மூலப் பொருளாகவே அயல் நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படுகின்றது. இந்தியாவில் பல பருத்தி வகைகள் சாகுபடி செய்யப்பட்ட போதிலும், அவையாவும் அமெரிக்காவிலும் எகிப்திலும் சாகுபடியாகும் பருத்திக்கு

கிராகமாட்டா. இந்தியப் பருத்தி நீளத்திலும் பருமனிலும் குறைவாயிருக்கிறது. எனவே அப் பருத்தி உயர்ந்த நம்பர் நூல்கள் நூற்கப் பயன்படு வதில்லை. உயர்ந்த வகைப் பருத்தியை இந்தியாவி லும் உற்பத்தி செய்ய அரசாங்கத்தார் நெடுங்கால மாகப் பல முயற்சிகள் செய்துள்ளார்கள். இவற் றின் பயனுக ஓரளவு உயர்ந்த இனப்பருத்தி நாட் டில் சாகுபடி ஆகிவருகிறது. ஆயினும் நயம் மிகுந்த நூல்கள் இழைப்பதற்குப் பெரும்பாலும் இறக்குமதி யையே நம்பியிருக்கவேண்டிய நிலை ஏற்பட்டுள்ளது. இவற்றையும் நாட்டிலேயே சாகுபடி செய்வது அவ சியமாகும். ஆராய்ந்தறிந்த முறைகளைக் கைக் கொண்டு பருத்தி சாகுபடி நடைபெறுமானல் இந் தக் குறை நாளா வட்டத்தில் நீங்கிவிடும்.

சணல்: பருத்திக்கு அடுத்த மூலப்பொருள் சணலாகும். இது பெரும்பாலும் வங்காளத்தில் கங்கை, பிரம்மபுத்திரா என்ற இரு நதிகளும் கலக் கும் இடத்தில் உள்ள டெல்டாக்களில் (கழிமுகப் படுகை) பயிராகின்றது. இதுவன்றியும், ஆஸாம், பீஹார், ஒரிஸ்ஸா முதலிய மாகாணங்களிலும் சில இடங்களில் பயிராகின்றது. தென்னமெரிக்காவி லும் வேறு பல தேசங்களிலும் இதனைப் பயிர்செய்ய முயன்றனர். ஆனல் பயன்படாது போயிற்று. எனவே இப்பொருளில் இந்தியாவுக்குத் தனி உரிமை இருக்கின்றதெனலாம். ஆண்டொன்றுக்குச் சுமார் 31 லக்ஷம் ஏகராக்கள் பயிராகின்றன. 96 லக்ஷம்

கட்டு உற்பத்தியாகின்றது. இவற்றுள் பாதி ஏற்றுமதியாகின்றது. பயிரிடும் நிலத்தின் அளவையும் சாகுபடியையும் இன்னும் எவ்வளவோ பெருக்க இடமுண்டு.

**எண்ணெய் விதை :** எண்ணெய் விதைகள் பல வகைப்படும். இவைகளில் உலகத்திலேயே இந்தியாவின் சாகுபடி தலைசிறந்து நிற்கின்றது. சுமார் ஒன்றேமுக்கால்கோடி ஏகரா நிலங்களில் எண்ணெய்விதை பயிராகின்றது. கோடிக்கணக்கான டன்கள் ஆண்டு தோறும் உற்பத்தியாகின்றன. பயிர் முறையைச் சீர்திருத்தினால் இந்தச் சாகுபடியை எளிதில் பெருக்கலாம்.

**கரும்பு :** அடுத்தபடியாகக் கரும்பு ஒரு முக்கியமான மூலப்பொருளாய் இருக்கிறது. சுமார் 31 லக்ஷம் ஏகராக்கள் ஆண்டு தோறும் பயிராகின்றன. சமீபத்தில் கரும்பு சாகுபடி மிகுந்திருக்கின்றது. ஆயினும் ஜாவா முதலிய நாடுகளை ஒப்பிடும் போது இந்தியக்கரும்பு சாறு குறைந்ததாய் இருக்கிறது. திருந்திய விவசாயமுறையைக் கையாண்டதனால் கரும்புச் சாகுபடியில் அண்மையில் தகுந்த முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது. மேலும் இத்திருத்தங்கள் தொடர்ந்து நடைபெறுமானால் இந்தியாவின் கரும்பு விளைவு பன்மடங்கு பெருகு மென்பதில் ஐயமில்லை.

**ரப்பர் :** தற்காலத் தொழிலுலகத்துக்கு இன்றியமையாத மற்றொரு மூலப்பொருள் ரப்பராகும்.

ரப்பர் தோட்டங்கள் சென்னை மாகாணத்தில் நீலகிரி, சேலம் ஜில்லாக்களிலும், மைசூர், கொச்சி, குடகு முதலிய நாடுகளிலும், வட இந்தியாவில் ஆஸாமிலும் சிறந்து காணப்படுகின்றன. சுமார் 1¼ லக்ஷம் ஏகரா பயிர் செய்யப்படுகிறதென்றும் 3 கோடி ராத்த லுக்கு மேலாக ரப்பர் ஆண்டொன்றுக்கு உற்பத்தி யாகின்றதென்றும் புள்ளிவிவரங்களால் வெளியா கின்றது. இன்னும் எவ்வளவோ ரப்பர்மரங்களை வெட்டாமல் விட்டிருக்கிறார்கள். இன்னும் எவ் வளவோ நிலப்பரப்பில் ரப்பர் சாகுபடி செய்ய இடமிருக்கின்றது. ரப்பரைப் பொறுத்த வரையிலும் உள்நாட்டின் தொழில்களுக்கு மட்டுமல்ல, அயல் நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யவும் போதிய அளவு இந்தியாவில் உற்பத்தி யாகின்றது.

காட்டுப் பொருள்களிலே தடி, மூங்கில், பதஞ் செய்ய உதவும் பட்டைகள், பசைகள், மெழுகுகள், குங்குலியம், சிலவகை எண்ணெய்கள் முதலியன முக்கியமானவை. இந்தியாவிலே காடுகளின் மொத்தப்பரப்பு சுமார் எட்டுக்கோடி ஏகராக்க ளாகும். மரத்தடியும், விறகுமாகச் சுமார் மூன்றரைக் கோடிக் கனஅடிகள் உற்பத்தியாகின்றன. இதைத் தவிர மற்றைச் சில்லறை விளை பொருள்களிலிருந்து சுமார் ஒன்றரைக்கோடி ரூபாய் வருவதாக மதிப் பிடப்படுகின்றது. அன்றியும் சுதேச சமஸ்தானங் களில் இருக்கும் காடுகளின் பரப்பு ஏராளமாய் இருக்கிறது. ஆயினும் ஏற்ற இடங்களில் ஏற்ற

மரங்களை வளர்ப்பித்து அவைகளை உரிய காலத்தில் காட்டிலிருந்து நாட்டில் கொண்டுசேர்க்க அரசாங்கத்தார் தகுந்த வசதிகள் செய்தாரில்லை. இவ்வழியில் அரசாங்கமும் முனையவேண்டும்.

## விலங்குப் பொருள்கள்

விலங்குப் பொருள்களிலே தோல், உரோமம், எலும்பு, கொம்பு, கொழுப்பு முதலியன முக்கியமானவை. இந்தியாவிலே சுமார் இரண்டு கோடி கால் நடைகள் இருக்கின்றன. எட்டுக் கோடி ஆடுகள் இருக்கின்றன. ஏராளமான விலங்குப் பொருள்கள் ஏற்றுமதியாகிக்கொண்டே இருக்கின்றன. எனவே இவ்விஷயத்திலும் இந்தியாவின் நிலைமை சிறந்ததென்றே சொல்லவேண்டும்.

விலங்குப் பொருள்களில் முக்கியமானவை தோல் வகைகளாகும். ஆண்டொன்றுக்குச் சுமார் ஒன்றரை லக்ஷம் டன் தோல் இந்தியாவில் பெறப்படுகின்றது. இதில் பாதி ஏற்றுமதியாகின்றது. ஆனால் நம் நாட்டு விலங்குகளின் தோல்கள் பல குறைபாடுகள் உடையன. நோயாலும் முதுமையாலும் இறந்துபடும் விலங்குகளின் தோல்களே இங்குப் பெரும்பாலும் விலைக்கு வருகின்றன. ஆதலால் அவை தேய்ந்து மாய்ந்து காணப்படுகின்றன. மேனாடுகளிலோ மிருகங்களை ஊன் கருதிக் கொல்லும் பழக்கம் அதிகமாக இருப்பதால்

அங்குள்ள தோல்கள் நல்ல பருவ மிருகங்களின் தோல்களாய் இருக்கின்றன. மேலும் இந்தியாவில் மாடுகளுக்குச் சூடுபோடும் பழக்கமும் இருந்து வருகின்றது. அதுவும் தோலின் சீரிய தன்மையைக் குறைத்து விடுகின்றது. இக்காரணங்களால் இந்தியத் தோல் மிகக் குறைவாக மதிக்கப்படுகிறது. ஆயினும் ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் இவற்றைச் சுளுவான விலைக்கு வாங்கி நுட்பமான பதன் செய்யும் முறைகளால் உயர்ந்த தோல் சரக்குக ளாக்கி விடுகிறார்கள்.

**உரோமம்:** உலகமெங்கும் வேண்டப்படும் மற் றொரு விலங்குப் பொருள் உரோமமாகும். இந்த உரோமம் மூன்று தரப்படும். இந்தியாவில் மூன்றாந் தரமான உரோமமே உற்பத்தியாகின்றது. இது பெரும்பாலும் கம்பளம், போர்வை முதலியவை செய்யவே பயன்படுகின்றது. இந்திய உரோமத் துக்கு உள்நாட்டில் அதிகத் தேவையில்லை. சுமார் ஆறுகோடி ராத்தல்கள் ஆண்டுதோறும் உற்பத்தி யாகின்றன. இதில் ஐந்து கோடிக்குமேல் ஏற்றுமதி யாகிறது. உயர்ந்த தரத்து உரோமம் ஆஸ்திரேலியா விலிருந்து ஓரளவுக்கு இறக்குமதியாகிப் பஞ்சாபி லும் மத்திய மாகாணத்திலும் உள்ள மில்களால் உயர்ந்த ரக உரோம ஆடையாக நெசவு செய்யப்படு கின்றது. இந்தியாவின் உரோமம் ஏனைய நாட்டுச் சரக்குகளைவிட நயம் குறைந்தது என்பது ஒரு புற மிருக்க ஆடுகளும் குறைந்த அளவே உரோமம்

அளிக்கின்றனவாய் இருக்கின்றன. ஆஸ்திரேலியா, அமெரிக்கா முதலிய நாடுகளில் ஆடொன்றுக்குச் சராசரி ஏழு ராத்தல் உரோமம் உற்பத்தியாகின்றது. இந்தியாவில் இரண்டு ராத்தல் கிடைப்பது பெரும் பாடாய் இருக்கின்றது.

## தாதுப் பொருள்கள்

**இரும்பு:** தாதுப் பொருள்கள் உலோகப் பொருள் என்றும் ஏனையவை என்றும் இருவகைப் படும். உலோகப் பொருள்களில் இரும்பே முக்கிய மானது. இந்திய நாட்டில் பல பாகங்களிலும் இரும்புக்கனிகள் உண்டு. ஆயினும் வங்காளம், பீஹார், ஒரிஸ்ஸா முதலிய மாகாணங்களில் உள் ளவை நிலக்கரிச் சுரங்கங்களுக்கு அண்மையில் இருப்பதால் எளிதில் எடுக்கக்கூடிய நிலைமையில் இருக்கின்றன. சென்னையிலும் மைசூரிலும் உள்ள இரும்புக்கனிகளில் மின்சார வசதிகள் ஏற்படும் போதுதான் வேலைசெய்ய இயலும். இவையன்றிக் கோடிக்கணக்கான டன் இரும்பு மத்தியமாகாணத் திலும் தென்னிந்தியாவிலும் பூமிக்குள் இருக்கின் றது. ஆனல் இவற்றிலெல்லாம் ஏராளமான கந்த கம், பாஸ்பரஸ் முதலிய வஸ்துக்கள் சேர்ந்திருப்ப தால் இரும்பின் குணம் குறைவுபட்டதாய் உள்ளது. ஆயினும் உலகத்தில் வேறு எந்த நாட்டையும் விட இந்தியாவில் மிகுதியான இரும்பு இருக்கிறதென்றே சொல்லவேண்டும்.

**செம்பு முதலியன :** செம்பு நாட்டின் பல பாகங்களில் இருப்பினும், பீஹாரில் சிங்கபம் என்ற ஜில்லாவிலேதான் எடுக்கக்கூடிய நிலைமையில் இருக்கின்றது. இதிலும் கனி உயர்ந்த தரமாகக் காணப்படவில்லை. எனவே செம்பைப்பொறுத்த வரையில் இந்தியாவின் நிலைமை சிறப்பாகச் சொல்வதற்கில்லை. **துத்தநாகத்தின்** நிலைமையும் செம்பை ஒத்ததாகவே இருக்கிறது. துத்தநாக அடையல் பர்மாவில் சில இடங்களில் காணப்படுகின்றதேயன்றி, இந்தியாவில் இதுவரை காணப்படவில்லை. **ஈயமும்** இந்தியாவில் உற்பத்தியாவதில்லை. தகரத்தின் நிலையும் மேற்கூறிய இரண்டு உலோகங்களின் நிலைமையை ஒத்தே இருக்கிறது. **மாங்கனீஸ்** என்னும் உலோகத்தின் உற்பத்தியில் இந்தியா உலகத்தில் தலை சிறந்து நிற்கின்றது. இரும்பு, எஃகுத் தொழில்களுக்கு இது இன்றியமையாத ஒரு வஸ்து. ஆண்டொன்றுக்குச் சுமார் பத்து லக்ஷம் டன் உற்பத்தியாகின்றது. இதில் பெரும்பாகம் மூலப்பொருளாகவே அமெரிக்காவிற்கும், ஐரோப்பாவிற்கும் ஏற்றுமதியாகின்றது. பீஹார், ஒரிஸா, பம்பாய், சென்னை, மத்திய மாகாணம் முதலிய இடங்களில் மாங்கனீஸ் கனிகள் வெட்டி எடுக்கப்படுகின்றன. உலோகத்தொழில்களிலும் இரசாயனத் தொழில்களிலும் பயன்படும் மற்றொரு முக்கியமான பொருள் **குரோமியம்** என்னும் உலோகமாகும். இது மைசூரிலும், பீஹார், ஒரிஸ்ஸா முதலிய பிற தேசங்களிலும் கிடைக்கின்றது. ஆண்டொன்றுக்கு

சுமார் 62 ஆயிரம் டன் உற்பத்தியாகின்றது. உலகத்தில் வேறெந்த நாட்டிலும் இவ்வளவு உற்பத்தியாவதில்லை. அதோடு பலுஜிஸ்தானிலும் மைசூரிலும் விளையும் குரோமியம் உயர்ந்த தரத்ததாய் இருக்கிறது. வருங்காலத்தில் பல ஆண்டுகளுக்குப் போதுமான குரோமியம் நாட்டில் இருக்கிறது. இன்னும் **பாக்ஸைட்** அலுமினியச் சாமான்கள் செய்வதற்கு இன்றியமையாத ஒரு தாதுப் பொருள். பம்பாய், மதராஸ், மத்தியமாகாணம், ஒரிஸ்ஸா முதலிய இடங்களில் இது ஏராளமாக இருக்கின்றதென்று தெரியவருகிறது. இவற்றைத் தவிர **நிக்கல், கோபால்ட்** முதலிய பல உலோகப் பொருள்கள் இந்தியத்தொழில் வளர்ச்சிக்கு அவசியமானவை. ஆனால் இவை ஏராளமாக இந்தியாவில் இல்லையாதலால் இறக்குமதி செய்தே ஆக வேண்டும்.

**நிலக்கரி:** மேற்கூறிய உலோகப்பொருள்களேயன்றி உயரிய பல இயற்கைத் தாதுப்பொருள்களும் நவீனத்தொழில் வளர்ச்சிக்கு இன்றியமையாதனவாகும். அவற்றுள் நிலக்கரியை முக்கியமாகக் கூறலாம். இயந்திரங்களை இயக்குவதற்கு வேண்டிய சூட்டையும், சக்தியையும் நிலக்கரி கொடுப்பதோடு பலவகைப்பட்ட இரசாயனப் பொருள்கள் உற்பத்தி செய்வதற்கும் உதவியாய் இருக்கின்றது. நிலக்கரி இந்தியாவின் பல பாகங்களில் காணப்படுகின்றது. ஆயினும் நூற்றுக்குத் தொண்ணூறு பங்கு

வங்காளம், பீஹார், ஒரிஸ்ஸா ஆகிய இடங்களிலேயே உற்பத்தியாகின்றது. ஆண்டொன்றுக்கு 2½ கோடி டன்களுக்கு மேல் நிலக்கரி அகழ்ந்து எடுக்கப் படுகின்றது. மொத்தம் ஐயாயிரத்து நானூறு கோடி டன் இந்தியாவில் இருக்கின்றதென்றும் இதில் மூந்நூறு கோடி டன் நிலக்கரிதான் உயர்ந்த தரத்ததென்றும் நிபுணர்கள் மதிப்பிடுகின்றனர். இந்திய நிலக்கரியோடு கந்தகம், பாஸ்பரம் முதலிய பொருள்கள் கலந்து காணப்படுவதால் மேனாடுகளில் உற்பத்தியாகும் நிலக்கரியைவிடத் தரங் குறைந்ததாய் இருக்கிறது.

**பெட்ரோலியம்:** அடுத்த முக்கியமான ஒரு தாதுப்பொருள் பெட்ரோலியம் ஆகும். ஆஸாம், பஞ்சாப் முதலிய இடங்களில் பெட்ரோலியக் கேணிகள் இருக்கின்றன. ஆயினும் இப்பொழுது பெட்ரோலியம் பெரும்பாலும் பர்மாவில் இருந்தே வருகிறது. பஞ்சாப்பிலும், ஆஸாமிலும் உள்ள எண்ணெய்ப்புலங்களை இன்னும் செவ்வையாகக் கண்டுபிடித்து வேலைசெய்ய ஆரம்பிக்கவில்லை.

**கந்தகம்:** பல இரசாயனப் பொருள்கள் செய்வதற்குக் கந்தகம் மிகவும் அவசியமாகும். இதிலிருந்து கந்தகிகா அமிலம் (Sulphuric acid) செய்யப்படுகின்றது. இந்த அமிலம் பற்பல முக்கியமான நவீன இரசாயனப் பொருள்களுக்கு மூலாதாரமாயிருக்கிறது. ஆனல் இவ்வளவு முக்கியமான

கந்தகம் இந்தியாவில் மிகச் சொற்பமாகவே அகப்படுகின்றது. பற்பல நாடுகள் இறக்குமதி செய்வதைப்போல இந்தியாவும் கந்தகத்தை இறக்குமதி செய்துகொள்ள வேண்டியதுதான்.

**சோடா :** கண்ணுடி செய்வதற்குக் குவார்ட்ஸ் மணலும், சோடா என்ற தாதுப் பொருளும் மிக முக்கியமாகும். இந்த மணல் ஐக்கிய மாகாணத்திலும், பரோடாவிலும் ஏராளமாக உண்டு. சோடா மத்திய மாகாணத்திலும், சிந்து நாட்டிலும் கிடைக்கின்றது. ஆனல் கண்ணுடி செய்வதற்கு இயற்கைச் சோடாவைவிட இரசாயன ஆலையில் உற்பத்தியாகும் செயற்கைச் சோடாவே உயர்ந்த தென்று கருதிப் பெரும்பாலார் அதை உபயோகித்து வருகின்றூர்கள்.

**அபூர்வ மண்கள் :** தொழில் வளர்ச்சிக்குப் பல வகைப்பட்ட அபூர்வ களிமண்கள் இன்றியமையாதன. ஓடு, மண்குழாய், பீங்கான் பாத்திரம், மின்சாரப் பீங்கான், மண்சட்டிகள் முதலிய பற்பல பொருள்கள் செய்வதற்கு இந்தக் களிமண்கள் பயன்படுகின்றன. இவற்றில் வேண்டிய வகைகளெல்லாம் இந்தியாவில் கிடைக்கின்றன. இவற்றைப்பற்றிய பூரணமான ஆராய்ச்சி இன்னும் செய்யப்படவில்லை என்றே சொல்லவேண்டும்.

**மைகா :** இது முக்கியமான மின்சாரத் தொழிலுக்கும் பல வகை வர்ணங்கள் செய்வதற்கும் பயன்

படுகின்றது. சென்னை மாகாணத்தில் நெல்லூரில் இது விளைகின்றது. திருவாங்கூர் சமஸ்தானத்திலும் ஏராளமாகக் கிடைக்கின்றது. மத்திய இந்தியாவிலும், பீஹார், ஒரிஸ்ஸா மாகாணங்களிலும் மைகா அடையல்கள் ஏராளவில் உள்ளன. உலக மைகா உற்பத்தியில் நூற்றுக்கு அறுபத்தைந்து பாகம் இந்தியா தருகின்றது. ஆனால் இந்த அடையல்களை இன்னும் பழைய முறையிலேயே சுரங்கம் வைத்து எடுத்து வருகிறார்கள். ஏனைய நாடுகளில் புது முறைகளில் இவை எடுக்கப்படுகின்றன. இம்முறைகள் இந்தியாவிலே மேற்கொள்ளப்பட வேண்டும்.

**மெக்னஸைட்:** இந்தத் தாதுப் பொருள் செயற்கை வைரங்கள் செய்வதற்கு மிகுதியும் பயன் படுகின்றது. இது சென்னை மாகாணத்தில் பல இடங்களில் காணப்படுகின்றது. சென்ற யுத்தத்தின் போது சேலம் ஜில்லாவில் இருந்துதான் இங்கிலாந்துக்கு இது ஏற்றுமதி செய்யப்பட்டது. சேலத்தில் இதன் உற்பத்தி நாளுக்கு நாள் பெருகிக்கொண்டே போகின்றது.

மேற்கூறியவற்றைத் தவிர நவீனத் தொழில் முறைக்கு வேண்டிய வேறு தாதுப் பொருள்களும் சில உண்டு. அவைகளும் இந்தியாவில் ஆங்காங்குக் காணப்படுகின்றன. ஆயினும் அடையல்கள் அதிக வளமானவை யல்ல.

இதுகாறும் விவரித்த நிலைமையிலிருந்து இந்தியாவில் தாவரப் பொருள்களும் உலோகப்பொருள்களும் தாதுப்பொருள்களும் தகுந்த அளவில் இருக்கின்றன வென்பது தெளிவாகின்றது. தாவரப் பொருள்களைத் தகுந்த சாகுபடி முறைகளைக் கையாண்டு ஏற்ற பண்புடையனவாகச் செய்து கொள்ளவேண்டும். ஏனைய மூலப் பொருள்களில் செம்பு, துத்தநாகம், ஈயம், கந்தகம் இவைதான் போதிய அளவு இல்லை. இவற்றை இறக்குமதி செய்துகொள்ள வேண்டும். எல்லாப் பொருள்களும் குறைவற நிறைந்திருக்கும் நாடு எங்குமேயில்லை. ஆனால் இந்தியாவில் மேலே கண்டபடி சில முக்கியமான உலோகப் பொருள்களிலும் தாதுப்பொருள்களிலும் ஏனைய நாடுகளைவிட நிலைமை சிறந்து இருக்கின்றது. சிற்சில பொருள்களைமட்டும் இறக்குமதி செய்துகொள்வோமானால், தொழில் வளர்ச்சிக்கு வேண்டியவெல்லாம் போதிய அளவு இங்கே இருக்கின்றன என்றே கொள்ளத்தகும். ஆனால் ஒன்று : நாட்டில் இருக்கிற பல விலையுயர்ந்த அடையல்களைக் கண்டபடி எடுத்து விரைவில் அழித்து நாட்டின் தொழில் வளர்ச்சிக்கு ஊனம் விளையாமல் கவனித்தல் வேண்டும்; இது அரசாங்கத்தின் கடனாகும்.

---

# 3. முதலும் அமைப்பும்.

ஆரம்பத்தில் இந்தியப் பெருந்தொழிலுக்கு வித்தாக நின்றது பிரிட்டானியரின் முதலேயாகும். அவர், தேயிலை முதலிய தோட்டத் தொழில்களைத் தோற்றுவித்த பின்னர், சுரங்கம், சணல், காகிதம், சிம்மென்று ஆகிய தொழில்களை அவர் தொடங்கினர். இந்தியமக்கள், பஞ்சு, இரும்பு, மின்சாரம், சர்க்கரை ஆகிய தொழில்களை ஆரம்பித்தனர். அண்மையில் தோன்றிய தொழில்களிற் பெரும்பான்மையும் இந்திய முதலைக்கொண்டே தொடங்கப்பட்டன. அன்னியர் முதலால் ஆரம்பிக்கப்பட்டு நடந்து வந்த தொழில்கள் பின்பு இந்தியருக்குரிமையானதும் உண்டு. ஆங்கிலேயரின் பொருளால் தொடங்கிய சணல் ஆலையின் உரிமையில் நூற்றுக்கு அறுபது பங்கு இன்று இந்தியருடையதாய் விட்டது. இந்திய முதலால் ஏற்பட்ட பெருந்தொழில் ஆலைகட்கு, அதிகாரிகளாயும், மேற்பார்வையாளராயும் வெளி நாட்டார் அமைதலும் உண்டு. பஞ்சாலைகளிலும், இரும்பாலைகளிலும், அமெரிக்கரும், ஆங்கிலேயரும் அமர்ந்திருத்தலைக் காணலாம்.

வெளிநாட்டு முதலால் தொழில்கள் பெருகிய போதிலும் அதனால் ஏற்பட்ட இடையூறுகளும்

உண்டு. தமக்கு ஊதியமும், நலமும் தரும் தொழில்களை வெள்ளை முதலாளிகள் தோடங்கினரே யன்றி நாட்டுக்கு நலம் பயக்கும் தொழில்களை ஆரம்பிக்கவில்லை. ஆதலால் நாட்டிலுள்ள பணமும், தொழிலால் வந்த ஊதியமும் வெளிநாட்டிற்கே சென்றன. அன்றியும், அவர்கள் இந்தியர்க்குத் தொழில்முறைகளையும், நுட்பங்களையும் கற்பித்தாரில்லை. தொழிலாளரைப் பலவாறுகத் துன்புறுத்தினர். ஆதலின் வெளிநாட்டு முதலை எத்துணை அளவு பயன் படுத்திக் கொள்ளலாமென்பதை ஆராய 1925-ல் இந்திய வெளிநாட்டுப் பொருட்குழு ஒன்று நிறுவப்பட்டது. அக்குழுவினர் சில முடிவுகள் செய்தனர். "வெளிநாட்டு முதலாளிகள் அரசாங்க உதவியை விரும்புவராயின், இந்தியரைத் தொழில்களில் பழக்குதல் வேண்டும். அத்தொழிற்சாலைகள் இந்தியாவிலேயே பதிவு செய்யப்படல் வேண்டும். ஓரளவு இந்தியர் நடத்துபவராகவும், உறுப்பினராகவும் இருத்தல் வேண்டும். ஒருவன் தனி உரிமையாக அத்தொழில் நிலையங்கள் அமையாது பல்லோருக்கு உரிய நிலையில் அமைக்கப்படல் வேண்டும்" என்பன அவர் முடிவுகள். இந்த ஒழுங்குகளை அரசாங்கம் ஏற்றுக்கொண்டதோடு, இந்திய முதல் மண்டியுள்ள தொழிற்சாலைகளின் பண்டங்களையே பெரிதும் பயன்படுத்தி ஆதரித்தது.

வெளிநாட்டு முதல் இந்தியத்தொழிலைப் பாதித்தது என்பதில் சிறிதும் ஐயமில்லை. ஆனல்

உள்நாட்டு முதல் வந்து தொழில் பெருகுதற்கும் இடனில்லாதிருந்தது. இந்தியர் அதிக வட்டியையும், மிகுந்த ஊதியத்தையும் எதிர்பார்த்தனர். நிலம் வாங்குவதிலும், நகைகளை ஈடாகப் பெற்றுப் பொருள் பெருக்குவதிலுமே கண்ணுங் கருத்துமாக இருந்தனர். முதலிட்டுத் தொழில்களை வளர்தற் குரிய ஊக்கமும், மன உறுதியும் அவர்கள்பால் இல்லாது ஒழிந்தன. பாங்கு வசதிகளும் இல்லை, ஆயினும், இருபதாம் நூற்றாண்டில் தேசீய இயக் கத்தின் பயனாகவும், அரசாங்கத்தின் ஆதரவாலும். இந்தியத் தொழிலுக்கு உள்நாட்டு முதல் தேவை ஏற்பட்டுள்ளது. அண்மையிற்கண்ட கணக்கின்படி வெளிநாட்டாரின் முதல் 940 கம்பெனிகளில் 500 கோடி ரூபாய் இருக்கின்றதெனவும், இந்திய முதல் 303 கோடி ரூபாய் 10,627 கம்பெனிகளில் உள்ள தெனவும் அறியப்படுகின்றது. இதனால் வெளி முதலினும் எவ்வளவு குறைந்ததாய் இந்திய முதல் உள்ளதென்பதனை உணரலாம். இந்தியச் செல்வம் பதுங்கிக் கிடக்கின்றது. நாணி மறைந்து கிடக்கும் செல்வ நங்கை வெளியே வந்து தொழிலினை ஊக்கும் காலத்து நாடும் தொழிலும் ஓங்கும் என்பது உறுதி.

இந்தியத் தொழிலில் முதலிட்டவர் பலதிறத் தினராவர். பார்சியர் பலர்; உத்தியோகஸ்தர் சிலர். குவாலியார், பரோடா, ஐதராபாத் ஆகிய தேய அரசர்களும், அத் தேசங்களைச் சேர்ந்த தனி

நபர்களும் முதலிட்டுள்ளார்கள். அகமதாபாதில் ஓய்வு பெற்ற உத்தியோகஸ்தரும், ஷராப்புக்களும் தொழிலுக்காக முதல் உதவியுள்ளார். பாம்பே, சோலாப்பூர், அகமதாபாத் முதலிய இடங்களிலுள்ள முதல், ஆலை முதலாளிகளிடம் மக்கள் வட்டி கருதிக் கொடுத்த பொருளேயாகும். ஆலை முதலாளிகள் தொழிலாற் பெறும் ஊதியத்தை முதலாய்க் கொண்டு வேறு பல தொழில்களும் தொடங்கினர். யுத்த காலச் செழிப்பினால் பஞ்சாலைகள் பல தோன்றின. சீனரோடு செய்த அபின் வாணிபம் பேரூதியம் பயந்ததால் அப்பொருளைக் கொண்டும் தொழில்கள் ஓங்கின.

ஆயினும் இந்திய மக்கள் தம் பொருளை, அரசாங்கக் கடன் பத்திரம், ரயில்வே போன்ற உறுதியான துறைகளில் நூற்றுக்குத் தொண்ணூறு பகுதியும், எஞ்சியதைப் பஞ்சு, நிலக்கரி, சணல் ஆகிய தொழில்களுக்குமே கொடுத்துள்ளார். இக்கணக்கினை எண்ணும்போது தொழில்களில் முதலிட எவ்வளவு பிற்போக்குடையராய் நாட்டு மக்கள் இருக்கின்றார்கள் என்பது நன்கு விளங்கும், ஆனால் இப்பொழுது தொழில்கள் வளர முன்னினும் அதிகமாக முதல் அளிக்கின்றனர். பழைய தொழில்களை ஆதரிக்கின்றனர். புதுத் தொழில்களில் பங்கு கொள்கின்றனர். நிலத்திற்கும் நகைக்குமே செலவிட்ட நிலைமை மெல்ல மாறிவருகிறது. இன்றேல் பஞ்சாலையும், சணலாலையிற் பெரும் பகுதியும்,

நிலக்கரியில் மூக்காற் பங்கும் இன்று இந்தியரின் கையிலே இருக்க முடியுமா ?

என்றாலும், நாட்டுத் தொழில் வளர்ச்சியடையப் போதிய மூலதனம் நாட்டினுள்ளேயே கிடைக்குமா என்ற ஐயம் பலருக்கு எழுகின்றது. மூலதனம் எவ்வளவிருக்கும் என மதிப்பிடுவது எளிதன்று. பாங்குகள் பெருகியிருக்கும் மேனாடுகளிலேயே இது எளிதன்றென்றால், பாடுபட்டுத் தேடிய பணத்தைப் புதைத்து வைக்கும் கேடுகெட்ட பழக்கம் உள்ள நம் நாட்டில் சொல்லவும் வேண்டுமோ? பொதுவாகப் பார்க்கும்பொழுது, நாட்டின் மூலதனம் லேவாதேவிக்காரர்களிடமும், பாங்குகளிடமும் அடங்கிக் கிடக்கின்றது. லேவாதேவிக்காரர்களிலே உண்டியல் கடைக்காரர்கள் பண்டுதொட்டே உள் நாட்டு வியாபாரம் நடைபெறுவதற்கு ஓர் அளவு உதவியாயிருக்கின்றனர். நவீன முறையில் தோன்றியுள்ள பாங்குகளோவெனில், (1) ரிஸர்வ் பாங்கு அல்லது தேச மத்திய பாங்கு (2) இம்பீரியல் பாங்கு (3) அயல் நாட்டு வர்த்தகப் பாங்குகள் (Foreign Exchange Banks) (4) கூட்டுக் கம்பெனிப் (Joint Stock) பாங்குகள் (5) கூட்டுறவுப் Co-operative Bank) பாங்குகள் (6) தபாற் சேமிப்புப் பாங்குகள் (Post Office Savings Banks) எனப் பலவகைப்படும். சென்ற முப்பது நாற்பது ஆண்டுகளில் பாங்கு வசதிகள் எவ்வளவோ மிகுந்திருக்கின்றன ; பாங்குகளின் தொகையும் பெருகியிருக்கின்றது. ஆயினும்,

நாட்டின் ஜனத் தொகைக்கும், பரப்புக்கும் பட்டணங்களின் எண்ணுக்கும் ஏற்ற அளவு பாங்குகள் எழவில்லை. இதற்குக் காரணம் அடிக்கடி உண்டாகும் பாங்கு முறிவுகளே. பாங்கு முறிவுகளால் மக்கள் தம் பொருளை அவைகளில் போட அஞ்சுகின்றனர். எனவே, ஏராளமான பொருள் தொழிலுக்கோ வியாபாரத்துக்கோ பயன் படாது, நாணிப் புதையுண்டு கிடக்கின்றது.

நாணிப்புதைந்து கிடக்கின்ற தென்றதனால், பூமிக்குள் ஆழப்புதைத்து வைக்கப்பட்டிக்கிற தென்பது பொருள் அல்ல. அந்தப் பழக்கம் பெரும்பாலும் இப்போது இல்லையென்றே சொல்ல வேண்டும். அதிலும், தபால் சேமிப்புப் பாங்கிகள் கிராமங்களில் கூட தோன்றியதாலும், நாட்டில் அமைதி நிலவியிருத்தலாலும், பெரும்பாலான மக்கள் தங்கள் மீதிப் பொருளைப் புதைப்பதில்லை. ஆனால் வருந்தித் தேடிய தனமானது மற்றொரு முறையில் புதைபடுகின்றது. அப்புதையல்தான் தங்க வெள்ளி நகைகள்.

இந்தியப் பெண் மக்களை — ஏன் சில ஆண் மக்களையுங்கூடப்—பற்றியிருக்கும் நகைப்பைத்தியம் போல் உலகில் வேறெங்கும் காண்டலரிது. பெண்களுக்குச் சொத்துரிமை இல்லாமை இதற்கு ஓரளவு பொறுப்பே ஆயினும், பொன்னாசையே

முக்கியமானதாகும். சென்ற எட்டொன்பது ஆண்டு களாகத் தங்கத்தின் விலை உயரவே, சுமார் 350 கோடி ரூபா பெறுமான பொன் ஏற்றுமதியாகி இருக்கிறது. இன்னும் எவ்வளவோ பொன் பெண்டிரின் நகை ரூபத்தில் முடங்கிக் கிடக்கிறது. நகைப் பைத்தியம் படித்த சில பெண்களிடம் குறைந்து வருகின்றதே ஒழிய ஏனையோரிடத்தில் சற்றும் குறைந்தபாடில்லை. அதற்கு மாறாக, முன் பித்தளை வெள்ளி நகைகள் பூண்டு வந்த பல ஜாதியினர் இப்பொழுது தங்க நகைகள் அணிவதே மதிப்பென்றும் நாகரீக மென்றும் கருதுகின்றனர். உலகத்தில் உற்பத்தி யாகும் தங்கத்தில் ஐந்திலொரு பங்கு இவ்வாறு ஆண்டுதோறும் இந்தியரால் நகைநட்டுக்களுக்காகக் கொள்ளப்படுகின்றதென்று அறிஞர் கணக்கிடுகின் றனர். பொருளாதார நிலைமையில் மிகத் தாழ்ந்த படியிலிருக்கும் இந்தியாவுக்கு இது ஒவ்வாத செய லாகும். இந்த நகைப் பைத்தியத்தைப் போக்கடிக்கச் சாதாரண வைத்தியம் போதாது. சட்டமும் சாலாது. கல்வியறிவும் சீர்திருத்தவாதிகளின் தீவிரப் பிரசாரமுமேயன்றி, இப்பித்துக்குப் பிற மருந்துகள் இல்லை. ஆனல் அம்மருந்துகள் பலனைக் கொடுக்கப் பல நாட் பிடிக்கும்.

எனவே, பாங்கிகளில் சேமிப்புக்காக மக்கள் போட்டிருக்கும் தனமே தொழில் வளர்ச்சிக்குத் தற்போது பயன்படும். அதிலும், முழுத்தொகையை யும் எடுக்கமுடியாது. வியாபாரத்துக்கும், மக்கள்

பிற தேவைக்கும் போக எஞ்சுவது ஏறக்குறைய 60 கோடி ரூபாய் என்று டாக்டர் ஸோனி என்பவர் தமது நூலிற் குறிப்பிடுகிறார். இந்த மதிப்புக் குறைந்ததென்றே கருத இடமிருக்கிறது. ஆயினும் இது கண்ணியமானதொரு தொகை அன்றோ? அங்ஙன மிருந்தும் இந்தியாவில் தொழில் வளர்ச்சிக்கு வேண்டும் மூலதனம் மிகக்குறைவாக இருக்கின்றதென்ற அவச்சொல் வருவானேன்?

பொருளுள்ள மக்கள் ஊதியந்தரும் தொழில்களிலும் கம்பெனிகளிலும் பணம்போட விரைவதில்லை. இதற்கு அடிப்படையான காரணம் புதிதாய்த் தோன்றும் தொழில்களில் பொது ஜனங்களுக்கு நம்பிக்கை இல்லாமையே யாகும். சென்ற சில ஆண்டுகளாக எத்தனையோ தொழில் ஆலைகளும், கூட்டுக் கம்பெனிகளும் புற்றீசல் போலப் புறப்பட்டு மறைந்து விட்டன. இவைகளால் பொது மக்கள் பெருத்த தொகைகளை இழந்துவிட்டார்கள். ஏழை மக்கள் மிகுந்துள்ள இந்தத் தேசத்திலே, கூட்டுக் கம்பெனிகள் (Joint Stock Companies) சமீபத்தில்தான் தலையெடுத்துவரும் இந்தத் தேசத்திலே, இவ்வளவு நஷ்டங்கள் ஏற்பட்டால் பொது மக்கள் தொழில் முயற்சிகளில் முதலைப்போட அஞ்சுவது இயல்பே அன்றோ? நெடுநாள் நடந்துவரும் கம்பெனிகளிலும் பல தகுந்த ஊதியத்தைக் கொடுப்பதில்லை. சமீபகாலம் வரையிலும் லேவாதேவியில் ஒன்று வட்டி வந்துகொண்டிருக்கையில்

கூடினால் அரை வட்டிக்கு மேல் ஊதியந்தராத தொழில்களில் மக்கள் எவ்வாறு பொருளைப் போடு வார்கள் ? ஏமாற்றுக்காரர்களும் புரட்டர்களும் பல கம்பெனிகளில் தலைவர்களாயிருந்துகொண்டு பொதுப்பணத்தை வஞ்சித்து நாட்டை இந்த நிலைக்குக் கொண்டுவந்துவிட்டனர். அறியாமையும் அனுபவக்குறைவும் ஓரளவில் இதற்குக் காரணங்கள் எனலாம்.

இந்திய மூலதனம் இந்தியத் தொழிலில் மேலும் விரைந்து நிரந்து பாயவேண்டுமானால், முதலில் பாங்கிச் சட்டத்தைச் சீர்திருத்தி அமைக்க வேண்டும். சமீபகாலத்தில் சிறியனவும் பெரியன வுமாகப் பல பாங்கிகள் முறிந்துவிட்டன. இத் தகைய முறிவைத் தடுத்து, பணம் போடுகிறவர் களுக்குப் பாதுகாப்பளிக்கும் வகையில் பாங்கிச் சட்டத்தைச் சீர்திருத்தி அமைக்கவேண்டும். இந்தப் பணியை அரசாங்கத்தார் மேற்கொண்டிருக்கின் றனர். பாங்கிச் சீர்திருத்த மசோதா ஒன்றைத் தயாரித்து, பொதுமக்கள், பாங்கியாளர்கள் முதலி யோர் கருத்தை அறிந்து வருகின்றனர். இது கால தாமதமாகாமல் விரைவில் சட்டமாய் வருதல் வேண்டும்.

மற்றொன்று கூட்டுக் கம்பெனி முறையில் ஏற்படவேண்டிய சீர்திருத்தம். சட்டத்தினால் ஓரள வுக்கு இது இயலுமேனும், நம்பிக்கைக்குரியவ ராய், அனுபவம் நிறைந்தவராய், உழைப்பாளராய்,

பிறர் பொருளைத் தம்பொருள்போற் பேணுபவராய் உள்ள கூட்டுக் கம்பெனிச் செயலாளர்கள் போதிய அளவு தோன்றுதவரை பொதுமக்கள் தொழில் முயற்சிகளில் மூலதனம் போட முன்வரமாட்டார்கள்.

இவ்விரண்டோடு இந்தியத்தொழில் வளர்ச்சிக்கு இன்றியமையாத மற்றொன்று தொழிற் பாங்கிகள். சாதாரணமான பாங்கிகள் வியாபாரத்துக்கே பெரிதும் பயன்படுகின்றன. தொழில்களைப் பொருத்தவரையில் தற்காலீகமாக வேண்டப்படும் பொருளை ஓரளவுக்குக் கொடுத்து வாங்கிக்கொண்டிருக்குமே யொழிய, நிலவரமாகத் தொழிலில் முதலை முடக்க இந்தப் பாங்கிகளுக்கு முடியாது. அப்படித் தொழில்களில் முடக்க நேர்ந்தால், வியாபார விஷயங்களுக்கு முட்டுப்பாடுண்டாகிப் பாங்கிகள் உடைய நேரிடும். எனவே நீண்டகாலம் முதலைப் போட்டுவைத்திருக்கிற முறையில் தொழில் பாங்கிகள் என்பன தனியாக ஏற்படவேண்டும். இது பொதுமக்களின் முயற்சியால் மட்டும் ஆவதல்ல. அரசாங்க ஆதரவு எவ்வளவோ வேண்டும்.

ஜெர்மனியிலும், ஜப்பானிலும் பெருந்தொழில்கள் தோன்றியதும், வளர்ந்ததும் இந்த முறையிலுள்ள தொழிற் பாங்கிகளால்தான். புதுத் தொழில்கள் தொடங்கப்பட்டால் இந்தப் பாங்கிகளே மூலதனம் உதவுகின்றன. பங்குகளைப் பொது மக்களிடம் விற்பனை செய்கின்றன. தொடங்குகின்ற

தொழில் சிறந்து தலையெடுக்குமா என்று ஆராயத் தனி நிபுணர்களை வைத்திருக்கின்றன. அங்ஙனம் தொடங்கப்பெற்ற கம்பெனிகள் தொடர்ந்து ஒழுங் காக நடைபெறுமாறு அவைகளை மேற்பார்த்து வருகின்றன; செயலாளர் கழகத்தில் தகுந்த இடம் பெறுகின்றன. இவ்வாறு தொழில்களுக்குத் தாயாய், நண்பனாய், நல்லாசிரியனாய் தொழில் பாங்கிகள் தொண்டாற்றி வந்துள்ளன; வருகின் றன—ஜப்பானிலும் ஜெர்மனியிலும். அரசாங்க ஆதரவைக் கொண்டிருத்தலால் பொதுமக்கள் தைரி யத்தோடு புதிதாகத் தொடங்கப்படும் கம்பெனி களில் பங்கெடுக்கவும், முதல் போடவும் முன்வருவார் கள். பாங்கிகளும் உள் நாட்டிலும், வேண்டுமானால் வெளி நாட்டிலும் தகுந்த முதலைத் திரட்டி அவ்வப் போது ஏற்ற தொழில்களைத் தொடங்க முடியும். அரசாங்க ஆதரவு பெற்ற நிலையங்கள் நாட்டில் தோன்றாதவரை, இந்தியத் தொழில் கரண்டு கொண்டுதான் கிடக்கும்.

# 4. தொழிலாளர்

ஒரு நாட்டில் இயந்திரங்கள் நிலைபெற்று ஆலைத்தொழில்கள் ஓங்கும்போது அங்கே சமூக அமைப்பிலும் பொருளாதார அமைப்பிலும் புரட்சிகரமான பல மாறுதல்கள் உண்டாகின்றன. ஆலைகளைச் சுற்றி ஆயிரக்கணக்கான தொழிலாளர் குழுமுகின்றனர். பெரு நகரங்கள் எழுகின்றன. ஜனநெருக்கம் மிகுதியாகின்றது. இருக்கை வசதிகளில்லாது ஏழைமக்கள் வருந்துகின்றனர். ஆலைகளையே நம்பித் தம் பூர்வக் கைத்தொழிலை மறந்த தொழிலாளர் பொருளாதாரச் சுதந்திரமும் இழந்தவராய் இயந்திரங்களுக்கு அடிமைபோலாகின்றனர். நூறு நூறாக வேலை செய்யும் தொழிலாளருக்கும் ஆலையின் ஒரு சில நிர்வாகிகளுக்கும் எவ்விதத் தொடர்புமில்லாது போகின்றது. பின்னவர் இலாபம் ஒன்றையே கருதி அரை வயிற்றுக்கும் பற்றாத கூலியே கொடுக்கின்றனர். ஈவிரக்கமின்றிப் பாலரையும் பெண்டிரையும் நெடுநேரம் வேலை வாங்குகின்றனர். ஆலை வேலை சிறைவேலை போலாகி விடுகின்றது.

இத்தகைய தீமைகளைப் போக்க ஒவ்வொரு நாட்டிலும் பரோபகாரிகளும், அரசாங்கத்தினரும் முன் வந்துள்ளனர். ஆனால் இந்தியாவில் இவற்றைப்

போக்கக் கிளர்ச்சி செய்தவர் பெரும்பாலும் இவர்களல்ல. பம்பாயிலே நெசவு மில்கள் தலையெடுத்து வருகின்றனவென்று அறிந்ததும் இலங்காஷயர் மில் முதலாளிகள் அழுக்காறு கொண்டனர். தொழிலாளருக்கு மிகக் குறைந்த கூலி கொடுத்து வெகு நேரம் வேலை வாங்கி வந்தால் பம்பாய் மில் தொழில் இலங்காஷயரை எங்கு வென்று விடுமோ என்று அஞ்சினர். எனவே அரசாங்கத்தார் ஆலைத் தொழிலாளருக்குச் சாதகமாகச் சட்டம் செய்ய வேண்டுமென்று கிளர்ச்சி செய்தனர். ஆலைத் தொழிலாளருக்குச் சாதகம் செய்வது இந்திய முதலாளிகளுக்குப் பாதகம் விளைக்கும் என்பது அவர் நம்பிக்கை.

முதல் ஆலைச் சட்டம் 1881-ல் எழுந்தது. ஏழு வயதுக்குட்பட்ட குழந்தைகளை ஆலையில் வேலைக் கமர்த்தலாகாதென்றும், ஏழு முதல் பன்னிரண்டு வயதுக்குட்பட்டவர்கள் நாளொன்றுக்கு 9 மணி நேரத்துக்குமேல் வேலை செய்விக்கப்படலாகாதென்றும், விதிக்கப்பட்டது. மேலும் அவர்களுக்கு ஒய்வு கொடுக்கவேண்டுமென்றும், மாதத்தில் நான்கு நாட்கள் விடுமுறை அளிக்கவேண்டுமென்றும் வரையறுக்கப்பட்டது. சட்டத்தை அமுலில் கொண்டுவர ஆலை இன்ஸ்பெக்டர்களும் நியமனம் செய்யப்பட்டனர்.

ஆயினும் அச்சட்டம் எண்ணிய பயனை அளிக்கவில்லை. நெசவு ஆலைத் தொழில் வளர்ந்துகொண்டு

தான் வந்தது. ஆதலின், 1891-ம் ஆண்டு மற்ருெரு சட்டம் வந்தது. இது குழந்தைகளுக்கேயன்றி பெண்களுக்கும் நலனளித்தது. குழந்தைகள் வேலை செய்யும் வயது ஒன்பதாக உயர்த்தப்பட்டது. நாளொன்றிற்கு அக் குழந்தைகளும் ஏழு மணியளவே வேலை செய்யலாமென விதிக்கப்பட்டது. மேலும், பெண்கள் 11 மணி நேரந்தான் வேலை செய்யலாமென்பதோடு இரவில் வேலை செய்தலாகாதெனவும், நடுப்பகல் அரைமணி ஓய்வும், வாரத்தில் ஒரு நாள் விடுமுறையும் எல்லோர்க்கும் கொடுக்கப் படவேண்டுமெனவும் அச்சட்டம் கூறியது.

இச்சட்டமும் பயனளியாமற் போயிற்று. வங்காளச் சணல் ஆலையின் வளர்ச்சியால் டண்டி முதலாளிகளுக்கு ஏற்பட்ட மனக் குறையும், பம்பாய்ப் பஞ்சு ஆலையின் வளர்ச்சியால் இலங்காஷயருக்கு ஏற்பட்ட மனப் புழுக்கமும் சிறிதும் குறைந்தபாடில்லை. ஆதலால் 1911-ல் மூன்ருவதாக ஒரு சட்டம் முளைத்தது. இது சிறிது முந்திய இரு சட்டத்தினும் விரிந்ததாயிருந்தது. குழந்தைகட்கிருந்த ஏழு மணிக் கால அளவு ஆறு மணியாய்க் குறைக்கப்பட்டது. ஆண்களாயினும், பெண்களாயினும், 12 மணி அளவே வேலை செய்யலாமென்ற விதி ஏற்பட்டது. இவற்ருேடு ஆலைகளில் சுகாதார முறைகளைக் கையாள வேண்டுமெனவும் இச்சட்டம் வற்புறுத்தியது.

யுத்த காலத்தில் இச் சட்டங்களின் முறுக்கு ஓரளவு நெகிளப்பட்டது. காலம் சிறிது நீடித்து

வேலை செய்தல் ஆகிய விதி விலக்குகள் ஏற்பட்டன. 1919-ஆம் ஆண்டு வாஷிங்டனில் அகில உலகத் தொழில் மகாநாடு கூடியது. அதன் பயனாக, 1922-ல் ஆலைச் சட்டமும், 1923-ல் சுரங்கச் சட்டமும் தோன்றின. ஆலைச் சட்டத்தால் வாரமொன்றிற்கு அறுபது மணியளவே வேலை செய்யலாமென்று வரையறுக்கப்பட்டது. சுரங்கச் சட்டம் 13 ஆண்டிற் குறைந்தவரை வேலை செய்ய அனுமதிக்கவில்லை. அன்றியும் சுரங்கங்களில் தரைக்கு மேலுள்ள பணிகளைச் செய்வோர் 60 மணியும், கீழுள்ள பணிகளைச் செய்வோர் 54 மணியுமே வேலை செய்யலாமென விதித்தது. மேலும் 1929-க்குள்ளாகப் பெண்கள் சுரங்கங்களில் வேலை செய்தலைப் படிப் படியாகக் குறைத்து நீக்கிவிட வேண்டுமென வற்புறுத்தியது.

தொழிலாளர் நிலைமையைப்பற்றி 1929-ல் விசாரிக்க ராயல் கமிஷன் நியமிக்கப்பெற்றது. அதன் அறிக்கையின் பயனாய் 1934-ல் ஆலை வேலை வாரமொன்றுக்கு 54 மணியாக்கப்பட்டது. 1935-ல் சுரங்கச் சட்டமும் வேலையை 54 மணி அளவு ஆக்கியது. இவையன்றியும், 1923-ல் தொழிலாளர் அபாய இட்டுச்சட்டம் ஒன்று ஏற்பட்டது. ஆலையில் வேலை செய்வோரின் உயிருக்கோ, உறுப்புக் களுக்கோ ஊனம் ஏற்பட்டால் முதலாளிகள் அவர் குடும்பத்தாருக்குக் குறிப்பிட்ட தொகை கொடுக்கும் பொறுப்புடையவர்கள் என்பது இதனால்

ஏற்பட்டது. மற்றும், கப்பல் தொழிலாளர், வெளி நாடு செல்லும் தொழிலாளர் ஆகியோரின் நிலைமைகளைப் பாதுகாக்க வேறு சட்டங்களும் தோன்றின.

ஆலை முதலாளிகள் பலர் காலாகாலத்தில் கூலியைக் கொடுப்பதில்லை. அளவுக்கு மிஞ்சிய அபராதம் விதித்தனர். ஆதலால் தொழிலாளர் கடனாளிகளாய் வருந்தினர். கூலிக்கொடுமையால் ஏற்பட்ட இக்குறையை நீக்க 1936-ல் கூலி ஒழுங்குச் சட்டம் பிறந்தது.

மேலும் தொழிலாளருக்கு நன்மை பயக்கும் பல சட்டங்களை அரசினர் கருதிக்கொண்டே இருக்கின்றனர். ஜப்பான் போன்ற ஏனைய ஆசிய நாட்டுச் சட்டங்களோடு ஒப்பிடுங்கால் இந்திய ஆலைச் சட்டம் சிறந்ததென்பதற்கு ஐயமில்லை.

முன் குறிப்பிட்ட சட்டங்கள் தோன்றுவதற்கு உதவியாயிருந்தது தொழிலாளர் இயக்கமாகும். பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் தோன்றிய இவ்வியக்கம் யுத்தகாலத்தில்தான் தலையெடுத்தது. விலைவாசி உயர்ந்தமையாலும், தேசீயக் கிளர்ச்சி ஓங்கினமையாலும், தொழிலாளர் இயக்கம் வலிமையுற்றது. 1921—22-ல் வேலை நிறுத்தங்கள் நடந்தன. தொழிலாளர் சங்கங்கள் பல தோன்றின. தலைமைச் சங்கமொன்றும் 1920-ல் ஏற்பட்டது. அரசாங்கம் இச்சங்கங்களின் முன்னேற்றத்திற்கு எவ்வகைத் தடையும் செய்யவில்லை.

1926-ல் நிறைவேற்றப்பட்ட சட்டப்படிக்குச் சங்கங்களை ஆதரித்ததோடமையாமல் வேண்டிய பாதுகாப்புகளும் அளித்தது. ஆனல் அடிக்கடி ஏற்பட்ட வேலை நிறுத்தத்தைத் தடுக்க தொழிலாளர் வேலை நிறுத்தச் சட்டம் ஒன்று பிறப்பித்தது, அரசாங்கமும் தொழிலாளர் சங்கமுமேயன்றி, முதலாளிகளிற் சிலரும், சமூக சேவையாளரும் தொழிலாளர் முன்னேற்றத்திற்கு ஆவன செய்து வருகின்றனர். சென்னைப் "பக்கிங்காம் கர்னட்டிக்" ஆலை முதலாளிகள் வேலையாளரின் குழந்தைகட்கு இலவசக் கல்வியளித்து வருகின்றனர். தொழிலாளர் கூடுதற்குக் கட்டிடம் அமைத்துள்ளனர். நூல் நிலையம் நிறுவியுள்ளார். இங்ஙனம் தொழிலாளர் முன்னேற்றத்திற்காக உழைக்கும் சங்கங்களில் முதன்மை வாய்ந்தவை சர்வென்டு ஆப் இந்திய ஸொஸைட்டியும், பாம்பே சோஷல் சர்வீஸ்லீகுமாம்.

தொழிலாளர் முன்னேற்றத்திற்குப் பல்வேறு முயற்சிகள் நடந்த போதிலும், ஏனைய ஜப்பான் முதலிய தேசத்துத் தொழிலாளர்களோடு ஒப்பிடுங் காலத்து இந்தியத் தொழிலாளரின் திறமை மிகக் குறைந்ததாகவே இருக்கின்றது. இவ்வரிய உண்மையை, டாக்டர் லோகநாதன் அவர்கள் தம் நூலில் புள்ளி விபரங்களோடு நன்கு விளக்கியுள்ளார். இதற்குப் பல காரணங்கள் உண்டு. வேலையாளரிற் பலர் கொஞ்சம் பணம் சேர்ந்ததும் காணி நிலத்தை எண்ணி நாட்டுக்குச் சென்றுவிடுகின்றனர்.

நகரங்களில் வாழ்க்கை நிலை மிக இழிந்த நிலையிலுள்ளது. மக்கள் இருக்குமிடம் நெருக்கடி மிகுந்தும், சுகாதாரமற்றும் காணப்படுகிறது. ஆதலின் சில விடங்களில் ஒழுக்கத் தவறுதல்களும் நேரிடுகின்றன. டாட்டா கம்பெனியார் அளித்துள்ளதுபோல் இருப்பிடவசதிகள் இவர்கட்கு எங்கும் இல்லை. தொழிலாளரைக் கொள்ளலும், தள்ளலும், சர்தார் எனும் கங்காணியின் கைக்குள் இருத்தலால் தரகு கருதும் கங்காணிகளால் தொழிலாளர் பாதிக்கப்படுகின்றனர். அடிக்கடி அளவுக்கு மிஞ்சிய அபராதங்கள் சுமத்தப்படுகின்றன. ஓரிடத்தில் நிலைத்து வேலை செய்யாது தொழிலாளர் பலர் ஓடித்திரிதலால் சங்கங்களை வலுப்படுத்த இயலாது போகின்றனர். குறித்த காலத்து வந்து வேலை செய்யும் வழக்கம் இல்லை. போதிய காரணமின்றி வேலை நிறுத்தம் முதலியன தொடங்கித் தொல்லை விளைக்கின்றனர். ஒழுங்காக வேலைக்குப் போகாது இருந்து விடுகின்றனர். கல்வியின்மை மிகுந்துள்ளது. மூடநம்பிக்கைக்கும் பயனற்ற சமூகப் பழக்க வழக்கங்களுக்கும் ஆளாகியிருக்கின்றனர். கட்டுப்பாட்டுக்கு அடங்கி நடக்கும் வழக்கம் இல்லை. நாட்டின் வெப்ப நிலையும் ஓரளவில் வேலையாளரைப் பாதிக்கின்றது.

இந்தியத் தொழிலாளர் நிலைமையைச் சீர் திருத்துவது எவ்வாறு? அவர்களைத் திறன் மிகுந்த வேலையாளராக்குவது எப்படி? முதன் முதலிற்

செய்யவேண்டுவது இருக்கை வசதியே யாகும். அவர்கள் தங்குமிடங்கள் சீர் திருத்தப்பட்டால், அடிக்கடி அவர்கள் உடல் நலங்காரணமாக நாட்டுப்புறத்துக்குப் போக நேரிடாது. இப்பொழுது பல நகரங்களில் தொழிலாளர் மிக நெருக்கமாக வாழ்கின்றனர். பம்பாயில்தான் நிலைமை மிகவும் மோசம். ஒரே அறை; அதில்தான் ஊணும், உறக்கமும், குளிப்பும், கொண்டாட்டமும். அந்தச் சிறு அறைக்குள் சுமார் ஐந்து பேர் வாழவேண்டிய நிலைமையிலிருக்கிறது. சுகவாசத்துக்கேற்ற போதிய விசாலமான வீடுகள் அமையுமாயின் தொழிலாளர் ஊர்ப்புறங்களுக்கு அடிக்கடி போய்வரமாட்டார்கள் என்பது ஜாம்ஷெட்பூரில் டாட்டா கம்பெனியார் கண்கண்ட அனுபவமாகும்.

தொழிலாளர் திறன் மிகும்படி வசதியான இருக்கைகளை அமைப்பது யார் கடன்? முதலாளிகளைப் பொறுத்ததுதான் என்று சொல்லப் பலர் முன்வருவார்கள். இது பொருந்தாது. முதலாளிகள் அனைவரும் அவ்வளவு பெரிய முதல் போடும் நிலைமையிலில்லை. அவர்களைக் கட்டுப்படுத்துவதனால் தொழில் வளர்ச்சிக்குத் தடை ஏற்படும். எனவே அரசாங்கமும், ஸ்தலஸ்தாபனங்களும் முதலாளிகளுக்கு ஓரளவு ஒத்தாசை செய்யவேண்டும். அரசாங்கம் பொருளுதவி புரியவேண்டும். ஸ்தலஸ்தாபனங்களும், முதலாளிகளும் அதற்குரிய வட்டியைப் பங்கிட்டுச் செலுத்தவேண்டும். தொழிலாளி

முதலில் ஒரு சிறு பங்கு மாதந்தோறும் கொடுத்து வரல்வேண்டும். ஆனல் இந்தத் தவணைத் தொகை பெரிதாயிருத்தலாகாது. இறுதியில் தொழிலாளி தான் குடியிருக்கும் வீட்டுக்குச் சொந்தக்காரனுகும் நிலைமை ஏற்படவேண்டும். அவ்வாறமைந்தால் ஒழிய நிலையான திறன்படைத்த தொழிலாளர் மக்கள் இந்தியாவில் தோன்றுவது அரிது. இந்த முறையில் ஒரு திட்டம் போட்டு நடத்தினல் விரைவில் இந்தியத் தொழிலாளர் வாழ்க்கைநிலை மேம்படும்; திறன் ஓங்கும்.

தொழிலாளருக்கு அமைக்கப்படும் வட்டாரங் களில் ஆங்காங்கே விளையாடுவதற்குப் புலங்களும் கருவிகளும் அமைத்தல் வேண்டும். இதில் சிறப்பாக அவர்கள் சிறுவர் சிறுமிகளின் நன்மையைக் கோர வேண்டும். விளையாடும் இடங்களையே இளைஞர் விரும்புவர். தமது இருக்கையையும், சுற்றுப்புறங் களையும் இளைஞர் விரும்பத் தொடங்கிவிட்டால் அவர்கள் வேறெங்கும் போகாது நிலைத்து வருங் காலத்தில் நல்ல தொழிலாளராவர்.

அடுத்தபடியாக அவர்கள் கல்வி நிலைமையைக் கவனித்தல் வேண்டும். நம் நாட்டில் நூற்றுக்குப் பத்து வீதமும் எழுதப்படிக்கத் தெரிந்தவரில்லை. தொழிலாளரில் நூற்றுக்கு ஒருவர் அல்லது இருவர் இருப்பாரோ என்பது ஐயம். ஜாம்ஷெட்பூர் ஒன் றில்தான் தொழிலாளரின் சிறுவர்களுக்குத் தகுந்த

முறையில் கல்வி கற்பிக்கப்படுகின்றது. ஏனைய இடங்களில் புகட்டப்படும் கல்வி கறிக்குதவாத ஏட்டுச் சுரைக்காயாயிருக்கிறது. தொழிலாளச் சிறுவர்களுக்கு வேண்டுவது இம்முறையன்று. எழுதுகோலோடு சுத்தியலும் கலந்து இடம் பெறும் தொழிற் கல்வியே அவர்களுக்கு மிகுந்த பயனை அளிக்கும். சென்னை மாகாணத்தின் கல்வி முறையில் அண்மையில் பெரு மாறுதல் ஏற்படப்போவதாக அரசாங்கக் கல்வி அதிகாரி அறிவித்துள்ளார். இந்தச் சீர்திருத்தம் வேருன்றினுல்தான் தொழில் நன்கு வளர்ச்சி அடையும். மேலெழுந்தவாரியாக நடத்தப்படும் சீர்திருத்தங்களால் நிலைத்தபயன் விளையாது. வார்தாத் திட்டம் தொழிற் கல்வியை அடிப்படையாகக் கொண்டது என்பது உண்மையே. ஆயினும், அது தொழிலாளச் சிறுவர்களிடம் புது உலக இயந்திர மனப்பான்மையைப் படைக்குமோ என்பது சந்தேகந்தான். அந்த மனப்பான்மை பிறந்தால்தான் இயந்திரத் தொழில் வளர்ச்சி எளிதில் ஏற்படும்.

தொழிலாளர் பலர் வேலையில்லாமையால் இடையிடையே வருந்துகின்றனர். மேலை நாடுகளிலே இப்படிப்பட்ட காலங்களில் அவர்களுக்குப் பொருளுதவி செய்யப்படுகின்றது. அரசாங்கத்தாரும், முதலாளிகளும் தொழிலாளரும் சேர்ந்து வேலையில்லாத காலத்துக்கு உதவ ஒரு நிதி திரட்டுகின்றனர். அந்த நிதிக்கு வெவ்வேறளவு

மாதந்தோறும் அல்லது வாரந்தோறும் தொகை செலுத்தி வருகின்றனர். இத்தகைய ஒரு இன்ஷூரன்ஸ் முறை இந்தியாவிலும் ஏற்பட்டால் தொழிலாளர் ஒரு சில நாள் வேலையில்லாதுபோனவுடனே வேறிடம் போக எண்ணார். ஆனால் இதற்கு ஏராளமான பொருள் செலவாகும். இந்தியா பெரிய தேசம். சுமார் 40 லட்சம் தொழிலாளர் இயந்திர ஆலைகளில் வேலை செய்கின்றனர். நாட்டின் பொருளாதார நிலைமையோ மேலை நாடுகளுக்குச் சற்று எட்டியும் பார்க்க முடியாதது. தொழில் வளர்ச்சி இப்பொழுது தான் தலையெடுத்து வருகின்றது. இந்தத் தருணத்தில் முதலாளிகளைத் தாங்க முடியாத பாரங்களையெல்லாம் தாங்கச் சொன்னால், நாட்டின் தொழில் வளர்ச்சி தளர்வுபடுமே அன்றித் தலை தூக்காது. இத்தகைய் நிதிகளாலும் செலவுகளாலும் இங்கிலாந்து போன்ற செல்வமிகுந்த நாடுகளே திணறிவிடுகின்றன என்றால் இந்தியா எம்மட்டு?

இந்தியத் தொழிலாளர் திறனுடையவராய் நிலையுடையவராய் வரவேண்டுமேயானால் மற்றுமொரு முக்கியச் சீர்திருத்தம் நடைபெறவேண்டும். அதாவது, இப்பொழுது அவர்கள் குறைந்தது பத்துப் பதினொரு மணி நேரம் நாளொன்றுக்கு வேலை வாங்கப்படுகிறார்கள். இந்த நிலையில் இந்திய இயந்திரத் தொழிலாளிக்கு உடல் ஓய்வு, மன அமைதி என்பவை இல்லாது போகின்றன. ஓய்வு இல்லாத மக்களுக்கு மன வுலகத்தின் இன்பங்கள்

இல்லை என ஒரு மேனாட்டு அறிஞர் கூறுகின்றனர். அவர்கள் வாழ்க்கை விலங்கு வாழ்க்கை போலாகிறது. எப்படி அவர்கள் வேலைத் திறமை உயரும்? இது ஒரு புறமிருக்க, இந்திய வெப்ப நிலைக்கு இயல்பாகவே மனிதர்கள் நெடுநேரம் வேலைசெய்வது இயலாததாகும். அங்ஙனம் செய்வதால் உடல் நலன் குன்றுகிறது. அதனால் தேச மக்கள் உடல் நலன் முழுவதும் இறுதியில் பாதிக்கப் படும். தற்கால மக்களை யன்றி வருங்கால சந்ததிகளையும் குறுகச்செய்யும். இந்தியத் தொழிலாளர் திறன் குறைந்தவராயிருப்பதால்தான் அதிக நேரம் அவர்களை வேலைவாங்க வேண்டியிருக்கின்றதென்று முதலாளிகள் வாதிக்கின்றனர். அதிக நேரம் வேலை வாங்குவதால்தான் அவர்கள் திறன் குறைந்தவர்களாயிருக்கிறார்கள் என்ற அடிப்படையான வாதத்தை அவர்கள் மறந்து விடுகிறார்கள். இதை இந்திய முதலாளிகள் சற்று யோசித்துப் பார்த்தல் வேண்டும். தொழிலாளர் வேலை நேரத்தில் குறைவு ஏற்படாதவரை வேறு என்ன சீர்திருத்தஞ் செய்தாலும் போதிய பயனைத் தராது.

தொழிலாளர் திறனுயர இன்றியமையாத மற்றொரு சீர்திருத்தம் அவர்கள் கூலியைப் பற்றியதாகும். அரை வயிற்றுக்கும் பற்றாத கூலி கொடுத்தால் தொழிலாளர் திறன் உடையவர்களாயிருப்பதெப்படி? கூலி விஷயத்தில் ஆலைதோறும் பட்டணம்தோறும் வேற்றுமை காணப்படுகிறது.

இந்த வேற்றுமையால் அடிக்கடி வேலைநிறுத்தங் களும் உண்டாகின்றன. "முதுகிலடித்தால் பொறுத் துக் கொள்வோம், வயிற்றிலடித்தால் எப்படி?" என்று இந்தியத்தொழிலாளர் கூறுவர். வயிற்றிலடித் தால் வேலையைத் திறனுகச் செய்யமுடியாது என்ற சிறு உண்மையை முதலாளிகளிற் பெரும்பாலார் உணராத நிலையிலிருக்கின்றனர். எனவே, 'இன்றி யமையாக் கூலி' (Minimum Wage) என்ற ஒரு கூலியை அரசாங்கத்தார் சட்ட மூலமாக வரையறை செய்ய வேண்டும். அந்தக் கூலிக்குக் குறைத்து எந்த முதலாளியும் கொடுக்க நேரிட்டால் சட்டப்படி தண்டனைக்குள்ளாக்கப்படல் வேண்டும். அக்கூலி யும் ஒரு தொழிலாளக் குடும்பத்துக்கு ஒருவாறுக நாட்டின் பொருளாதார நிலைக்கேற்றபடி போதிய தாக இருக்கவேண்டும். இதோடு கூலி கொடுப்ப தில் மற்றொரு சீர்திருத்தமும் செய்தாகவேண்டும். அபராதமென்றும், தண்டனையென்றும் அநியாய மாக முதலாளிகள் கொடுத்த கூலியில் ஒரு பங்கை மீண்டும் மறைமுகமாக எடுத்துக்கொள்ளும் பழக்க மும் அடியோடு நிற்கவேண்டும். இருக்கிற சட்டம் இந்தத் துறையில் தொய்வுடையதா யிருக்கின்றது.

தொழிலாளரைத் திரட்டும் முறையில் ஏற்படும் "கங்காணிகள்", "சர்தார்கள்" முதலியோரின் கொடுமைகள் முன்னே கூறப்பட்டன. அந்த அநாகரீகக் கொடுமை விரைவில் அகலவேண்டும். ஆலைகளிருக்குமிடங்களிலெல்லாம் தொழிலாளரைத்

திரட்டுதற்கெனத் தனி இலாகாக்கள் நிறுவப்படல் வேண்டும். இந்த இலாகாக்களில் தகுந்த அதிகாரி களை அமைத்தல் வேண்டும். அவர்கள் தொழிலா ளர் கங்காணிகள் கையில் சிக்காதபடி பார்த்துக் கொள்ள வேண்டும்.

கடும் வட்டிக்காரர்கள் கையிலிருந்து தொழி லாளரை விடுவிப்பது மற்றொரு கடமையாகும். தொழிலாளர் கூட்டுறவுச் சங்கங்கள் தோன்ற வேண்டும். நோய்வாய்ப்பட்டுச் சம்பாதிக்க வழி யில்லாது வருந்தித் தொழிலாளர் கடன் வாங்க முயலும்போது நோய்க்கால நன்கொடை என்று முதலாளிகள் ஒரு சிறு தொகை வழங்க வேண்டும். அல்லது இன்ஷூரன்ஸ் முறையில் நோய்நாளுக் குதவ ஆலைதோறும் ஒரு நிதி திரட்டவேண்டும். காலாகாலத்தில் சம்பளத்தைக் கொடுக்கவேண்டும். பாக்கி போடுவதால் தொழிலாளர் கண்மூடித்தன மாய்க் கடன் வாங்கிவிட்டுப் பிறகு திண்டாடுகிறார்கள். மாதச் சம்பளமாகக் கொடுப்பதைவிட வாரச்சம்பள மாகக் கொடுப்பது மேலாகும்.

தொழிலாளர் வாழ்க்கை பொதுவாகச் சீரடை தல் வேண்டும். மூடப்பழக்க வழக்கங்கள் ஒழிதல் வேண்டும். "சுத்தம் சோறளிக்கும்" என்பதை அவர்கள் உணரும்படி செய்யவேண்டும். உணவு முறையில் அறியாமையால் ஏற்பட்டுள்ள குறை களைப் போக்குதல் வேண்டும். கைக்குத்தரிசி

உண்பதைக்கைவிட்டதால் அவர்கள் பல நோய்களுக்குள்ளாகி விட்டார்கள் என்பதை எடுத்துக்காட்ட வேண்டும். வெறும் பசை (Starch) மிகுந்த உணவு வகைகளை வயிறு புடைப்பத் தின்பதினும் சாரமுள்ள பொருள்களை அளவாக அருந்துதலே நோய் வராது தடுக்கும் முறை என்பது அவர்கள் நன்குணர வேண்டியதொன்றாகும். கட்குடியின் சொல்லொணுத் தீமைகளை அகற்றுவதற்குத் தொழிலாளர் மிகுந்த பட்டணங்களிலெல்லாம் மதுவிலக்கு முறை ஏற்படல் வேண்டும். சேலம் ஜில்லாவிலே மதுவிலக்கால் ஆலைத் தொழிலாளர் நிலைமை அதி அற்புதமாகச் சீர்திருத்தமடைந்திருக்கிறதென்பது சென்னைப் பல்கலைக்கழகத்துப் பேராசிரியர் தாமஸ் அவர்களின் ஆராய்ச்சியால் புலனுகிறது. தொழிலாளர் தக்க உடல் நலனேடு இருக்கிருர்களா என்பதைக் கண்டறிய அவர்களைச் சில மாதங்களுக்கொரு முறை தக்க மருத்துவர்களைக் கொண்டு பரிசோதனைசெய்து வரல் வேண்டும். இதற்குப் பொருட்செலவு ஆகுமென்பது மெய்யே. ஆனல் தொழிலாளர் உடல் நலம் சமூகப் பொதுவைப்பன்றே?

இச் சீர்திருத்தங்களைப் பொதுஜனத்தலைவர்கள், அரசாங்கத்தார், முதலாளிகள் ஆகிய அனைவரும் தத்தம் பணியாக மேற்கொண்டு விரைவிற்செய்து முடிக்கவேண்டும். தொழிலாளர் தங்கள் நிலைமையைப் பல வழிகளிலும் மேம்படுத்தத் தொழிலாளர் சங்கங்களை ஏற்படுத்திக்கொண்டு வருகின்றனர்.

முதலாளிகள் நேர் வழியில் செய்யாத நன்மைகளை இந்தச் சங்கங்கள் பலவந்தமாக வேலை நிறுத்தம் போன்ற பிணக்கம் செய்து பெற்று வருகின்றன. இதைக்கண்டு பல முதலாளிகள் தொழிலாளர் சங்கங்களை நசுக்க முயல்கின்றனர். இதனுல் தொழிலாளர் முதலாளிகள் சண்டை வலுத்து வருகின்றதே யொழியக் குறைந்தபாடில்லை.

இந்தச் சண்டைகளால் தேசத்தின் தொழில் வளர்ச்சியே தடைபடுகின்றது. ஒற்றுமையே பலம் என்பதைத் தொழிலாள மக்கள் கண்டு கொண்டனர். முதலாளிகளின் நன்மை தொழிற் சங்கங்களை ஆதரிப்பதே; நசுக்குவதன்று. இதை முதலாளிகள் அறிந்துகொள்ள வேண்டும். கட்டுப்பாடுடைய தொழிற்சங்கங்கள் நிலைபெற்றிருக்கும் இங்கிலாந்து போன்ற நாடுகளில் தொழிலாளர் முதலாளிகள் சச்சரவு பெரும்பாலும் குறைவுதான். 'தொழிலாளர் அடிமைகள், நாம் எஜமானர்கள்' என்ற பண்டைக்கொள்கையை முதலாளிகள் விட்டுவிடவேண்டும். காலம் மாறிவிட்டது. அதற்கேற்றபடி முதலாளிகள் நடந்துகொள்ள வேண்டும். தொழிலாளர் சரிசமானமான மனிதர்கள் என்ற ஜனநாயகக் கொள்கை தள்ளரிய வெள்ளம் போல் பெருகி வருகின்றது. இதனை ஓர்ந்து முதலாளிகள் நடந்தால் அனைவருக்கும் நல்லது; இல்லாவிடின் விளைவு வேறுகும். இதற்கு ரஷ்யாவின் சரிதமே சான்றுக அமையும்.

# 5. அரசாங்கமும் தொழிலும்

---

எந்நாட்டிலும் தொழில்கள் அரசாங்க ஆதரவாலேயே முன்னேற்ற மடைகின்றன. அரசாங்கம் வீழ்ச்சியுறுங் காலத்து நாட்டுத் தொழில்களும் வீழ்ச்சியடைகின்றன. இங்கிலாந்து, பிரான்சு, இத்தாலி, ஜெர்மனி, ஜப்பான் போன்ற தேசங்களிலுள்ள தொழில்கள் அடைந்துள்ள வளர்ச்சிக்கு அந்நாடுகளின் அரசாங்க ஆதரவே காரணமாகும். அரசாங்கங்கள் பல்வேறு வகையில் ஆதரவளித்தன. காப்பு வரிகள், தடை வரிகள் ஏற்படுத்தியும், மானியமும், முதலும் வழங்கியும் உதவி செய்தன. போக்கு வரவு வசதியும், சலுகையும் தொழில் வளரக் காரணமாயிருந்தன. தொழில்களைப் பற்றிய ஆராய்ச்சிகளைச் செய்தும், தொழிற் கல்வியைப் பரப்பியும், மாதிரி ஆலைகளை ஏற்படுத்தியும் தொழில்களை வளர்த்தன. பாங்கிகளும், நாணய விகிதமும் அவற்றிற்குப் பேருதவியாய் அமையுமாறு சட்டங்கள் செய்தன. மேலும் நாட்டுக் குடிகள் என்ற முறையில், தொழிலாளர்களை ஆதரித்ததும், தொழிலாளருடைய சுகாதாரம் போன்ற நன்மைகளில் கவனம் செலுத்தியதும், அத்தேசங்களில் தொழில்கள் வளரக் காரணமாயிருந்தன.

இனி, இந்தியத் தொழிற் சரித்திரத்தைக் காண்போம். கிழக்கு இந்தியக் கம்பெனியார் காலத்தில் இந்தியத் தொழில்கள் தளரத் தலைப்பட்டன. கம்பெனியார் தொழில் வீழ்ச்சிக்குக் காரணமானவரல்லர். பார்லிமென்றின் ஆணைப்படி கம்பெனி நடந்து வந்தது. சீமை முதலாளிகள் ஆதிக்கத்தில் பார்லிமென்று அகப்பட்டிருந்தது. ஆதலால் சீமைத் தொழில்களைப் பாதிக்காத முறையிலேயே கம்பெனியார் இரும்பு முதலிய இந்தியத் தொழில்களை ஆதரித்தனர். அன்றியும் தொழில்கள் செழிப்பதற்கு அடிப்படையாக இருந்த இயந்திரப் புரட்சி (Industrial Revolution) பிற்காலத்தேதான் தோன்றியது. வர்த்தகராகிய கம்பெனியார் இந்தியத் தொழில் வளர்ச்சியில் எண்ணமுடையவராகவேயிருந்தனராயினும் சீமை முதலாளிகளின் ஆதிக்கம் நிறைந்த பார்லிமென்றின் ஆணைக்குக் கட்டுப்பட்டவராயிருந்தமையால் இந்தியத் தொழிலுக்குப் போதிய ஆதரவு காட்டமுடியவில்லை.

1857-ம் ஆண்டு நிகழ்ந்த சிப்பாய்க் கலகத்துக்குப் பின் இந்திய நாடு, கம்பெனியார் கையினின்று அரசரின் ஆட்சிக்கு வந்தது. கம்பெனியார் காலத்திலிருந்ததைவிட இந்தியத் தொழிலின் நிலைமை மிகத் தாழ்ந்துவிட்டது. கம்பெனியார் வர்த்தகராதலால் தொழில் வளர்ச்சியைக் கருதினர். அக்கருத்து அரசாங்கத்திடம் இல்லை. அரசாங்கத்தால் வேண்டிய ஆதரவுகள் செய்ய முடியுமெனினும்

அது செய்ய முற்படவில்லை. அரசர் ஆட்சியின் கீழ் இந்தியா வந்தபோது சமாதானம் நிலவியது. மேனாட்டுக் கல்வி முறைகள் பரவின. ஆராய்ச்சித் துறைகள் வளர்ந்தன. போக்குவரவு வசதிகள் ஏற்பட்டன. இவை எல்லாம் ஆட்சியின் நன்மைக்காக ஏற்பட்டனவே யல்லாமல் இந்தியத் தொழில் வளர்ச்சிக்காகச் செய்யப்பட்டனவல்ல. காரணம், ஆங்கில முதலாளிகளைக் கொண்ட பார்லிமென்றின் ஆதிக்கம் வலுத்ததேயாகும். அரசாங்கத்தார் இந்தியத் தொழில்களிடம் பராமுகமாயிருந்ததோடன்றி, அவற்றின் வளர்ச்சிக்கு முட்டுக் கட்டைகளும் ஏற்படுத்தினர். இதற்கு இந்தியப் பருத்தித் தொழிலின் சரித்திரம் சான்று பகரும். 1857-க்குப் பிறகு அது தலையெடுத்தது. அரசாங்கமும் வருமானம் கருதி இறக்குமதி வரி விதித்தது. இது இலங்காஷயரின் மனக்கொதிப்பை எழுப்பியது. இறக்குமதி வரி, காப்பு வரியாய் நின்று பருத்தித் தொழிலுக்கு உறுதியளிக்கும்; இந்தியப் பருத்தி ஆலைத் தொழில் முன்னேற்றம் தம் தொழிலின் வீழ்ச்சியாகுமெனக் கருதி மேற்படி வரிகளை நீக்க அரசாங்கத்தாரிடம் முறையிட்டனர். சீமை முதலாளிகள் ஆதிக்கம் நிறைந்த பார்லிமென்றின் ஆணைப்படி அவ்வரிகள் அகற்றப்பட்டன. ஆயினும் இந்தியப் பருத்தித் தொழிலின் முன்னேற்றம் சிறிதும் தடைபடவில்லை. ஏனெனில் அப்போதைய இறக்குமதி வரிகளால் இந்திய மில் நெசவுத் தொழில்

எவ்வகைப் பயனுமடைந்ததில்லை. இறக்குமதிச் சரக்குகளின் தரம் வேறு. உள்நாட்டு உற்பத்திச் சரக்குகளின் தரம் வேறு. இரண்டுக்கும் போட்டி இருந்ததில்லை. அங்ஙனமிருந்தும் அந்த இறக்குமதி வரிகளை அகற்றிய அரசாங்கத்தார் எவ்வளவு தூரம் இந்தியத் தொழில் வளர்ச்சிக்கு எதிர்ப்பாயிருந்தன ரென்பது விளங்கும்.

இப்படி நடந்தது இந்த ஒரு முறையல்ல. மீண் டும் 1894-ல் பண நெருக்கடி ஏற்பட்டபோது வரு மானங் கருதிப் பருத்திச் சரக்குகள் மேல் அரசாங் கம் ஒரு சிறு இறக்குமதி வரி விதித்தது. அப்பொழு தும் இலங்காஷயரில் கூக்குரல் பிறக்கவே, அதனை நிறுத்துமாறு அந்த வரிக்கு ஈடாக இந்தியச் சரக்குகள் மேல் உள்நாட்டு வரி விதித்துவிட்டனர். இதனாலும் இந்திய மில் தொழிலுக்கு ஊனம் ஏதும் நேரிடவில்லையாயினும், மில் முதலாளிகள் மிகவும் பிரலாபித்தனர். காரணம், அவர்கள் தொழிலுக்கு நேர்ந்த நஷ்டத்தைக் கருதியன்று; அரசாங்கத் தாரின் மனப்பான்மையைக் கருதியே. நன்மை செய்யாவிடினும், தீமையாவது செய்யாதிருத்த லாகாதா என்றே அவர்கள் ஏங்கினர். இந்தியப் பெருந் தொழிலாகத் தலையெடுத்து வந்தது பருத்தி மில் தொழிலொன்றுதான். அதற்கும் இவ்வளவு சூழ்ச்சிகள் நிகழ்ந்தால், அரசாங்கத்தின் அனுதாப மின்மைக்கு வேறு சான்று வேண்டுமோ என வின வினர்.

இந்த அரசாங்க மனப்பான்மை பத்தொன்ப தாம் நூற்றாண்டின் இறுதிவரை மாறாதிருந்து வந்தது. 1898-ல் சென்னை அரசாங்கத்தார் இந்தியத் தொழில் வளர்ச்சிக்குச் சிறிதளவில் ஆதரவளித்தனர். சென்னையில் சித்திர வித்தியாசாலை (School of Arts) க்குத் தலைவராயிருந்த ஆல்பிரட் சாட்டர்டன் என்பவர் அலுமினியப் பாத்திரங்கள் செய்யும் தொழிலைத் தொடங்க விரும்பினார். அதற்காக அரசாங்கத்தார் ஒரு சிறு மானியம் வழங்கினர். இது தான் இந்தியத் தொழில் வளர்ச்சிக்கு அரசாங்கத்தார் முதன்முதற் காட்டிய ஆதரவு. இதைத் தொடர்ந்து கர்ஸன் பிரபு அரசப் பிரதிநிதியாயிருந்த காலத்து, மத்திய அரசாங்கத்தாரும் வர்த்தகத்தையும் தொழிலையும் வளர்க்கும் எண்ணத்தொடு ஒரு தனி இலாகாவை நிறுவினர். ஆனால் இந்த இலாகா ஊக்கமான வேலை எதையும் தொழில் வளர்ச்சி கருதி அக்காலத்துச் செய்யவில்லை.

சென்னையில் சாட்டர்டன் தொடங்கின அலுமினியத் தொழில் வெற்றி பெற்றது. அதைக் கண்டதும் சென்னை அரசாங்கத்தார் அவரை வேறு தொழில்களைத் தொடங்க ஊக்கினர். கை நெசவுத் தொழில், பம்புகளால் நீர் பாய்ச்சல், குரோம் முறையில் தோலைப் பதஞ்செய்தல் முதலிய தொழில்களெல்லாம் விருத்தி செய்யப்பட்டன. சென்னையிலிருந்த ஐரோப்பிய வர்த்தகருக்கு இது கூடப் பிடிக்கவில்லை. 1908-ல் உதகமண்டலத்திலே ஒரு

தொழில் மகாநாடு கூட்டப்பட்டது. அதில் அரசாங்கத்தார் கைத்தொழில்களை முன்னிலும் மிகுதியாக வளர்க்கவேண்டுமென்ற தீர்மானம் நிறைவேறியது. அதனை அரசாங்கத்தார் மேற்கொண்டு அதுவகைக்காக தொழில் டைரக்டர் என்ற ஒரு அதிகாரியை நியமிப்பதென முடிவு கட்டினர்.

அப்பொழுது இந்தியா மந்திரியாக இருந்த லார்ட் மார்லி "தொழில்களை வளர்க்க வேண்டுவது தனி மனிதர்களின் கடமை; அரசாங்கம் தலையிடுவதால் தீமையே விளையும்" என்று 1910-ல் ஒரு உத்தரவு பிறப்பித்தார். அதனொடு சென்னை அரசாங்கத்தின் தொழில் முயற்சிகளெல்லாம் அடங்கிவிட்டன- இதுபோலவே ஐக்கிய மாகாணத்திலும் நைனிதாலில் நடந்த தொழில் மகாநாட்டின் பயனாகப் பல தொழில்களை அரசாங்கம் ஆர்வத்தோடு தொடங்கிக் கொண்டிருக்கையில் மார்லி உத்தரவு வந்து அவற்றை நிறுத்திவிட்டன. மத்திய அரசாங்கத்தாரும் மார்லி உத்தரவால் ஏதுஞ் செய்ய இயலாதவராய்த் திகைத்துவிட்டனர். மார்லி பிரபுவுக்குப் பின் வந்த இந்திய மந்திரியான குரு பிரபு முக்கியமான மாகாணங்களில் தொழில் டைரக்டர்களை நியமித்துக்கொள்ள உத்தரவளித்தாராயினும், மார்லி உத்தரவாற் பிறந்த மன முறிவு மாறவில்லை.

இங்ஙனமிருக்கையில் 1914-ல் யுத்தம் வந்தது. அப்பொழுதுதான் தொழில் துறையில் இந்தியா அயல்நாடுகளை எதிர்பார்த்திருப்பது இந்தியாவுக்கேயன்றி இங்கிலாந்துக்கும் எவ்வளவு ஆபத்தான முறையென்பது விளங்கிற்று. இன்றியமையாத பண்டங்கள் இறக்குமதியாகாமல் நாட்டின் பொருளாதாரம் குலைந்ததோடு யுத்தத்துக்கு உதவியாகும் முறையில் சப்ளை செய்ய இந்தியத் தொழில்களும் இல்லை. இந்தியாவுக்கு முறையான ஒரு தொழில் திட்டம் வேண்டும் என்ற ஞானம் அப்பொழுதுதான் அதிகாரவர்க்கத்தினருக்கு உதயமாயிற்று. அரசப் பிரதிநிதியாயிருந்த ஹார்டிஞ்சு பிரபு இந்தியத் தொழில் வளர்ச்சியின் முக்கியத்தை வற்புறுத்தி இந்திய மந்திரிக்குப் பலவாறு எழுதலானர். அதன் பயனாக 1917-ல் இந்தியத் தொழில் கமிஷன் (Indian Industrial Commission) நிறுவப்பட்டது. அதோடு யுத்தகாலத்துக்கு இன்றியமையாத பொருள்களின் உற்பத்தியைப் பெருக்க (Indian Munitions Board) இந்தியத் தளவாட போர்டு என்ற ஒரு அமைப்பும் நிறுவப்பட்டது. தற்காலிகமாக அமைக்கப்பெற்ற இந்தத் தளவாட போர்டின் ஆதரவால் பற்பல புதுத் தொழிற்சாலைகள் நொடிப்பொழுதில் தோன்றிவிட்டன. "உங்களுக்கு வேண்டுவனவெல்லாம் செய்வோம், யுத்தம் முடியட்டும்" என்று அரசாங்கத்தார் ஆசை வார்த்தைகள் கூறினர். யுத்தம் முடிந்த பிறகு பராமுகமாயிருந்தனர்.

முன் அளித்த வாக்குறுதி எல்லாம் காற்றில் பறந்தன. எவ்வளவு விரைவில் தோன்றினவோ அதனினும் விரைவாய் அத்தொழிற்சாலைகள் அழிந்தன.

1917-ல் நிறுவப்பட்ட இந்தியத் தொழில் கமிஷனர்கள் இரண்டு ஆண்டுகள் விசாரணை செய்த பின், மிக முக்கியமான சில சிபார்சுகளைச் செய்தனர். அரசாங்கத்தின் மெய்யான ஆதரவில்லாது இந்தியத் தொழில்கள் முன்னேறவே முடியாதென்று கண்டிப்பாய் முடிவு கட்டினர். மூலப்பொருள்களைப் பற்றிச் சாஸ்திரீய முறையில் ஆராய்ச்சிகள் செய்யவேண்டும்; தேசத்தின் உயிர்நாடி போன்றிருக்கும் அடிப்படையான (Key) தொழில்களை நிறுவவேண்டும்; அதற்காக நிலக்கரி, ஜலமின் சாரம் முதலியவற்றின் மொத்த இருப்பை அளந்து காணவேண்டும்; தொழில் ஆராய்ச்சிக்கான கல்வித் துறைகளை நிறுவவேண்டும்; அரசாங்கமும் ரயில்வேக் கம்பெனிகளும் இந்தியப் பொருள்களையே வாங்க வேண்டும்; வெளி நாடுகளில் அரசாங்க வர்த்தக ஏஜண்டுகளை அமர்த்தவேண்டும்; சில மாதிரித் தொழிற்சாலைகளை நடத்திக் காட்டவேண்டும்; மூலதனம் உதவவேண்டும்; மாகாணங்களிலும் மத்திய அரசாங்கத்தின் சார்பிலும் தொழில் இலாகாக்களை அமைக்கவேண்டும்—இவைபோன்ற பல முக்கியமான முடிபுகளைத் தொழில் கமிஷனர் தெரிவித்தனர்.

கமிஷனரின் அறிக்கையை அனைவரும் ஒருங்கே வரவேற்றனர். ஆனால் அப்பொழுது அரசியல் உலகிலே எடுப்பான ஒரு சம்பவம் நிகழ்ந்து கொண்டிருந்தது. அதாவது இந்தியாவுக்குச் சீர் திருத்தம் அளிப்பதென்பது. மாண்டேகு சேம்ஸ் போர்டு அறிக்கை வெளியாகி 1919-ல் சீர்திருத் தச் சட்டமும் நல்கப்பட்டது. சீர்திருத்தத்திலே, கைத் தொழில்களை வளர்க்கும் பொறுப்பை மாகாண அரசாங்கங்களின்மீது பெரிதும் போட்டு விட்டார் கள். மத்திய அரசாங்கத்துக்கு ஒரு சில தொழில் துறைகளை மறைமுகமாக ஆதரிக்கும் பொறுப்பே மிஞ்சியது. இந்த முறை நாட்டுத் தொழில் வளர்ச் சிக்கு ஏற்றதன்று. மாகாண அரசாங்கங்களுக்கு பெருந்தொழில்களைத் தோற்றுவிக்கப் போதிய ஆற்றலும், பொருள் வசதியும் அமைந்திருக்கவில்லை. தேசம் முழுதும் ஒன்றுபட்டு உருவாகி வரும் ஒரு தொழில் திட்டத்தைப் படைத்து, காத்து, வளர்க்க எவ்வகையிலும் வலுவுடையது மத்திய அரசாங்கமே யாகும்.

சீர்திருத்தத்தால் இங்ஙனமாகத் தொழில் வளர்ச் சிக்கு இடர்ப்பாடு உண்டாயிற்றேனும், மற்றொரு வகையில் நன்மை பிறந்தது. அதுகாறும் இந்திய வரித் திட்டத்தைக் கூட்டிக் குறைத்து அமைக்க வைசிராய்க்குக்கூட அதிகாரம் கொடுக்கப்பட வில்லை. எல்லாம் பார்லிமென்டின் ஆணைப்படி இந்தியா மந்திரியே செய்துவந்தார். சீர்திருத்தத்தின்

போது ஏற்பட்ட கூட்டுக் கமிட்டி இந்த முறை இனிமேல் கூடாதென்றும், இந்தியாவின் நன்மை தீமைக்கு ஏற்ப வரித் திட்டத்தை அமைத்துக்கொள் ளும் பொறுப்பு இந்திய அரசாங்கத்துக்கே இருக்க வேண்டுமென்றும் முடிவு செய்தது. இந்த வரிச் சுதந்திரத்தை 1921-ல் இந்திய மந்திரியும் ஒப்புக் கொண்டார். அது முதல் இந்திய அரசாங்கத் துக்கு வரித்திட்டத்தை வேண்டியபடி அமைக்கும் (Fiscal Autonomy) முழு உரிமையும் கிடைத்தது. ஆனால் அவர்களுக்கு என்ன செய்யவேண்டும்; எப் படிச் செய்யவேண்டும்; நாட்டுக்குத் தேவையான தென்ன என்பனவற்றைப் பற்றிய அறிவு சூன்யமா யிருந்தது. எனவே, அவற்றைக் கண்டறிய ஒரு தொழில்வரித்திட்டக் கமிஷனை (Fiscal Commission) நிறுவினார்கள்.

வரித் திட்டக் கமிஷனர் ஆழ்ந்தகன்ற விசா ரணையின்மேல், இந்தியத் தொழில்கள் வளரவேண்டு மானால் இன்னின்ன முறைகளில் வரித்திட்டத்தை அமைக்கவேண்டுமென்று அரசாங்கத்துக்கு அறிக்கை சமர்ப்பித்தார்கள். "இந்தியாவின் இயற்கைச் செல்வத்தையும் ஜனத்தொகையையும் கவனிக்கும்போது இதுவரையிலும் ஏற்பட்ட தொழில் வளர்ச்சி குறைவானதாகவே காணப்படு கின்றது; இன்னும் எத்தனையோ அளவு வளர்ச்சி பெறுதல் வேண்டும்; அப்பொழுதுதான் தேச முழுமைக்கும் செழிப்பு ஏற்படும்" என்றமொழிகளால்

தொழில் வளர்ச்சியின் அவசியத்தை அடிப்படையாக எடுத்துக் கூறினார்கள். காப்பு வரிகள் இல்லாது இந்தியத் தொழில்கள் வளர முடியாது. ஆனால் இந்தக் காப்பு வரிகளைக் கண்டபடி எல்லா இறக்குமதிகள் மீதும் சுமத்துவதால் பயனில்லை. ஏற்ற தொழில்களையே இம்முறையில் ஆதரிக்கவேண்டும். அங்ஙனம் ஏற்ற தொழில்களைக் கண்டறிய மூன்று வழிகள் உண்டு: (1) காப்பு வரியால் ஆதரவளிக்க எண்ணப்படும் தொழில் இயல்பான இயற்கை வசதிகளைக் கொண்டதாயிருக்க வேண்டும். (2) காப்பு வரியில்லாது, அது வளர முடியாதென்ற நிலையிலோ அல்லது அவ்வளவு விரைவாக வளர முடியாதென்ற நிலையிலோ இருக்கவேண்டும். (3) காலஞ் செல்லச் செல்ல, காப்பு வரியின் ஆதரவில்லாமலே அத் தொழில் பிரதேசங்களிலுள்ள அதே தொழிலோடு உண்டாகும் போட்டியை எதிர்த்து நிற்கும் ஆற்றலுடையதாயிருக்க வேண்டும். இந்த இலக்கணங்களைக்கொண்ட தொழில்களைக் காணவும், அவற்றை வளர்க்க ஏற்ற வரியைத் திட்டப்படுத்தவும், 'டாரிப் போர்டு' என்ற ஒரு குழுவை நிறுவவேண்டும். எக் காரணத்தைக் கொண்டும் மூலப்பொருள்கள் மீது ஏற்றுமதி வரி விதித்தலாகாது. அடிப்படையான தொழில்களுக்குக் காப்பு வரியைவிட மானியம் வழங்கி ஆதரித்தலே ஏற்றமுடையது. பிரிட்டிஷ் சாம்பிராஜ்யத்தைச் சார்ந்த ஏனைய நாடுகளுக்கு வரிச் சலுகை காட்டுவது பொருத்தமில்லை. ஆயினும்

சட்டசபை விரும்பினால் குறிப்பிட்ட ஒரு சில பண்டங்களுக்குச் சலுகை காட்டலாம். ஆனால் அங்ஙனஞ் செய்கையில், தொழில்களுக்குக் காப்பு வரிகளால் இயல்பாக உள்ள ஆதரவு எவ்வழியிலும் குறைந்துவிடாத முறையிலிருக்கவேண்டும். இவைகளே கமிஷனர் செய்த முக்கிய சிபார்சைகள். கண்மூடித்தனமாயில்லாது அளந்து வழங்கும் இந்தக் காப்பு வரி முறையை (Discriminate Protection) ஆய்ந்த காப்புவரி முறை என்பார்கள்.

தொழில் வரிக் கமிஷனரின் அறிக்கையும் சிபார்சைகளும் எவ்வளவோ மெச்சத் தகுந்தவை. ஆயினும் அவற்றுள் அடிப்படையான குறையொன்றிருப்பதை ஆராய்ச்சியாளர் அறிகுவர். இயல்பிலேயே எழுந்துள்ள தொழில்களுக்கு வரிகள் மூலம் எவ்வாறு ஆதரவளிப்பது என்பதைக் கவனித்தார்களே யொழிய, புதிது புதிதாய் மூலாதாரமான பெருந் தொழில்களைத் தோற்றுவிக்கவேண்டுமே; அவற்றிற்குப் பெருத்த மூலதனம் வேண்டுமே; டாரிப் போர்டு வருங்காலத்தில் வரி ஆதரவு தருவார்கள் என்பதை நம்பிப் பெருத்த முதலைப் போட்டு முதலாளிகள் இறங்குவார்களா; என்பவற்றைப் பற்றி எல்லாம் அவர்கள் கவனித்தார்களில்லை. பின்னணியில் நிற்கும் ஒரு நாட்டைப் பெருந் தொழிற் செழிப்புடைய ஒரு நாடாக மாற்றுதற்குரிய நிலையான உருப்படியான உயிர்த்திட்டம் ஒன்றும் அவர்கள் வகுக்கவில்லை. நோயை அகற்ற

முயன்றார்களேயன்றி, நோயின் மூலகாரணத்தைநாடி உடற்கூறுகளை உரம்படுத்த நினைந்தாரில்லை.

ஆயினும், தொழில் வரிக் கமிஷனுக்குப் பிறகு மத்திய அரசாங்கத்தார் இந்தியத் தொழில் வளர்ச்சிக்கு நிலையான பல வேலைகள் செய்துள்ளார்கள். 1923-ல் டாரிப் போர்டு நிறுவப்பட்டது. தற்காலீகமாக அமைக்கப்பட்ட இந்தக் குழு பெரும்பாலும் ஒரு நிலையான ஸ்தாபனமாகிவிட்டதென்றே சொல்லவேண்டும். இதன் சிபார்சையின் பேரில் சென்ற 17 ஆண்டுகளில் பல தொழில்கள் காப்புவரி மூலம் ஆதரவு பெற்று வளர்ச்சி அடைந்திருக்கின்றன. இரும்பு, எஃகு, காகிதம், அச்சு மை, தீக்குச்சி, கந்தகம், பருத்தி, சர்க்கரை, பட்டு, சிமென்டு முதலிய தொழில்களெல்லாம் இன்று தலைதூக்கி உள்நாட்டுத் தேவைக்கும் வெளிநாட்டுத் தேவைக்கும் உத்தரஞ் சொல்லும் நிலைமையில் உயர்ந்துவிட்டன. இவை அன்றி, சாலை வளர்ச்சிக் கமிட்டி (Road Development Committee) என்ற ஒரு ஸ்தாபனத்தை நியமித்து அதன் உதவியால் பெட்ரோல் வரி விதித்து ரஸ்தாக்களைச் சீர்படுத்தி இருக்கின்றனர். தொழில் வளர்ச்சிக்குச் சாதகமாக சாமான்களின் ரயில் கட்டணங்களைக் குறைத்திருக்கின்றார்கள். கொச்சியிலும் விசாகப்பட்டணத்திலும் துறைமுகங்கள் அமைத்திருக்கின்றனர். ஏனைய துறைமுகங்களைச் செப்பனிட்டிருக்கின்றனர். அரசாங்கத்துக்கு வேண்டிய பொருள்களை இயன்றமட்டும்

உள்நாட்டிலேயே வாங்கும் கருத்தோடு பண்டசாலை இலாகா (Stores Department) என்ற ஒரு இலாகாவையும் ஏற்படுத்தியுள்ளார்கள். மத்திய அரசாங்கத்து வர்த்தக இலாகா, நாட்டின் தொழில் வளர்ச்சியில் முன்னிலும் அதிகக் கவலைகொண்டு வேலை செய்கின்றது. நியூயார்க், ஹாம்பர்க், மிலான், ஆப்ரிக்கா முதலிய அயலிடங்களில் வர்த்தக ஏஜெண்டுகளை நியமித்திருக்கிறார்கள். பருத்தி, கரும்பு முதலிய மூலப்பொருள்களை விருத்தி செய்யும் பொருட்டு ஆராய்ச்சிக் கழகங்களை நிறுவியுள்ளார்கள்.

சீர்திருத்தச் சட்டப்படி மத்திய அரசாங்கத்துக்கு நாட்டின் தொழில்களை வளர்க்கும் பொறுப்பு நேரடியாக இல்லாதிருந்தும் இவ்வளவு செய்தது வியப்பே. தொழில்களைத் தழைக்கச் செய்யும் தனிப் பொறுப்பைத் தம் தலைமேல் தாங்கியிருந்த மாகாண அரசாங்கங்கள் என்ன செய்தன என்று பார்ப்போம். அவைகளுக்குப் பொறுப்பு இருந்ததே தவிர அந்தப் பொறுப்பை நடத்துவதற்குவேண்டிய பொருள் இல்லை. எனவே தொழிற் கல்வியிலோ, தொழில் ஆராய்ச்சியிலோ, தொழில் உதவியிலோ மாகாணங்கள் செய்த வேலை அற்பமே. இந்தியாவி லிருக்கும் தொழிற் பள்ளிக்கூடங்களை அமெரிக்கா முதலிய மேனாட்டுத் தொழிற் கலாசாலைகளோடு ஒப்பிடும்பொழுது வெட்கப்படவேண்டியநிலைமையில் இருக்கிறது. தொழில் ஆராய்ச்சியிலும் அவ்வாறே. அதோடு மாகாணஅரசாங்கங்கள் சீர்திருத்தத்துக்குப்

பிறகு மூலதனம் கொடுத்து உதவிய தொழிற்சாலைகள் இருந்தவிடம் தெரியாமல் போனதை நினைக்க வருத்தமுண்டாகின்றது. சென்னையில் 4 லக்ஷம் ரூபாய் அரசாங்கத்திலிருந்து கடன் உதவி பெற்றுத் தொடங்கப்பெற்ற கர்நாடகப் பேப்பர் மில் கம்பெனி நீரிற் குமிழிபோல் மறைந்தது சான்றாகும்.

இந்த நிலைமைக்குக் காரணம் யாது? தொழில் வளர்ச்சி தடைபட்டதேன்? ஆர்வத்தொடு தோன்றிய தொழில்கள் மாயமாய் மறைந்ததேன்? சீர்திருத்தத்தால் தொழில் வளர்ச்சியைப் பற்றிய பொறுப்பு மத்திய அரசாங்கம் மாகாண அரசாங்கம் ஆகிய இரண்டுக்குமிடையே பிரிந்து கலந்ததே காரணம். இருவர் பொறுப்பு ஒருவர் பொறுப்புமின்றாயிற்று. தொழில் வளர்ச்சி என்பது ஒரு தேசத்தின் அடிப்படையான வேலை. அதில் மாகாணங்களுக்குள் ஒற்றுமை யிருத்தல்வேண்டும். பேராற்றலுள்ள ஒரு அமைப்பின் பொறுப்பாக இருத்தல்வேண்டும். ஒரே லக்ஷியம் கொண்டதாய் இருத்தல்வேண்டும். இகல் என்பது இம்மியுமாகாது. இறுதியாக ஒரு பொருளாதாரத் திட்டம் போட்டு அந்தத் திட்டத்தின் இலட்சியத்தை எய்தும் முறையில் அரசாங்கத்தின் தொழில் பற்றிய கொள்கைகளும் செயல்களும் அமைந்திருத்தல் வேண்டும்.

# சில முக்கிய தொழில்கள்

## 1. கை நெசவுத்தொழில்

" செய்யுந் தொழிலெல்லாம் சேர எடுத்துரைக்கின்
நெய்யுந் தொழிற்கு நிகராகா "

நெசவுத்தொழில் மிகப்பழமையான நாட்டுத் தொழில். திருவள்ளுவரும் தீதற்றதென்று அத் தொழிலை மேற்கொண்டார். பண்டை இந்தியா விலே மங்கையர் பெரும் பாலர் நூலிழைத்து வந்தனர். குடிசை தோறும் இராட்டினம் சுழன்றது. ஊர்ச்சந்தி பலவற்றிலும் பாவாற்றல் நடந்தது. அந் நாளில் மேலை நாடுகள் அந்தகாரத்தில் ஆழ்ந் திருந்தன. வேந்தரும் விலங்கின் தோலன்றி வேறு அணிகலன் அறியார். அக்காலத்தில் உலகை உடுப் பித்தது இந்திய நெசவுத்தொழில். கி. மு. ஐந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த எரடாட்டஸ் (Herodotus) என்னும் சரித்திர ஆசிரியருக்கு நமது பருத்திச்செடி அதிக வியப்பினை அளித்தது. அதனை "உரோமம் தரும் மரம்" என்று அவர் வருணிக்கிறார்.

ஒப்புவமை யின்றி உயர்ந்திருந்த உரோம சாம்பிராஜ்யத்தின் வீழ்ச்சிக்கு இந்திய நெசவுத் தொழில் ஒரு தலையான காரணமாகும். உரோமா புரியின் மன்னரும் மாதரும் எழில்வாய்ந்த இந்திய ஆடைகளில் மட்டற்ற மோகம் கொண்டனர்.

சாம்பிராஜ்யத்தின் பொன் நாளடைவில் பாரத நாடு புகுந்தது. பொருளாதார வறட்சியால் உரோமாபுரி தளர்ந்தது.

மேலை நாடுகளை மயக்கியது மல்லாடையென்றும் மஸ்லின் என்றும் சொல்லப்படும் மெல்லாடையே. அதன் நுண்மையும் மென்மையும் சொல்லுந்தரத்த தன்று. அதற்கு வழங்கப்பட்ட பெயர்களே அதன் மென்மைக்குச் சான்று பகரும். "ஓடு நீர்", "மாலைப்பனி", "காற்றுடை" முதலியன எவ்வளவு அழகிய பெயர்கள்! இவற்றுள் டாக்கா மஸ்லின் ஒப்பற்றது. அதன் மென்மையை விளக்கும் கதைகள் பல.

தாவருணியர் என்ற ஒரு பிரஞ்சு யாத்திரீகர் பதினேழாம் நூற்றுண்டில் இந்தியாவுக்கு வந்திருந்தார். அவர் கண்ட அற்புதங்களில் ஒன்று இந்திய மஸ்லின். "முத்தும் பவளமும் பதித்த ஒரு தேங்காய்க் குடுக்கையை, இந்தியாவினின்று சென்ற ஒரு தூதன் தன் தலைவனை பாரசீக மன்னனுக்குச் சமர்ப்பித்தான். மன்னன் குடுக்கையைத் திறந்து பார்க்க அதனுள் அறுபது முளம் நீளமுள்ள ஒரு மஸ்லின் ஆடை இருந்தது...........அதன் இழை கண்ணுக்குத் தெரியாத நுண்மையதாயிருந்தது. சிலந்தியின் சித்திர வலையோ என ஐயுறுமாறிருந்தது" என்று குறிக்கிறுர். இருபது கஜ நீளம் ஒரு கஜம் அகலம் கொண்ட ஒரு மல்லாடை ஒரு சிறு

மோதிர வட்டத்துள் நுழையும் நுண்மையதாக இருந்ததென்றால் இந்திய மஸ்லின் மென்மைக்குப் பிறசான்று வேண்டுமோ !

இது பழங்கதை. பத்தொன்பதாம் நூற்றாண்டிலிருந்து இந்திய நெசவுத்தொழில் பாழ்படத் தொடங்கிற்று. இதற்குப் பல காரணங்களுண்டு.

நாட்டில் பெரிய அரசியல் குழப்பங்கள் ஏற்பட்டன. சிற்றரசரும் பேரரசருமான சுதேச மன்னர்களெல்லாம் புறப்பகைக்கும் உட்பகைக்கும் ஆளாகித் தாழ்ந்தனர். நாடு அல்லோல கல்லோலப் பட்டது. அரசர்கள் ஆண்டியாயினர். குறுநில மன்னர் பலர் வெறுநில மக்களாய்ப் போயினர். "மன்னனுயிர்த்தே மலர் தலையுலகம்". அரசறிய வாழ்ந்த நெசவுத்தொழிலின் வாழ்வு அதிர்ந்து வீழ்ந்தது.

இங்கிலாந்தில் அன்னி ராணியார் காலத்திலே இந்திய ஆடைகளுக்குப் பெருத்த வெறி ஏற்பட்டது. இந்தியத் துணியே நாகரீக அணி. டாக்கா மஸ்லினே செல்வத்தின் அத்தாட்சி. இந்தியப் படுதா இல்லாத ஆங்கிலச் சாளரம் நாகரிக நலமற்ற சாளரமே. இந்த மயக்கு ஆங்கிலக் கம்பிளித் தொழிலுக்கு ஆபத்தாய் முடிந்தது. கம்பிளி நெசவுத் தொழிலாளர் பெருங் கிளர்ச்சி செய்தனர். குடியரசு உடனே செவி சாய்த்தது. பதினெட்டாம் நூற்றாண்டில் இந்திய நெசவுச் சரக்கு இங்கிலாந்துக்குள்

வரவொட்டாமல் பல தடைகள் பிறந்தன. இறக்குமதி வரி, தடைவரி போன்ற கோட்டைச் சுவர்களை எழுப்பினர்.

இவ்வாறு நாட்டுக் கம்பிளி நெசவுத் தொழிலை வேற்றுப் பருத்தி நெசவுத் தொழிலுக் கிரையாகாமல் ஆங்கில அரசாங்கம் பாதுகாத்து வருகையில், வேறொரு பெருமாறுதல் அங்கே நிகழ்ந்தது. நூல் நூற்கவும், ஆடை நெய்யவும் புது விதமான இயந்திரங்கள் கண்டுபிடிக்கப்பட்டன. இந்த இயந்திரங்களால் தொழில் முறையே மாறிவிட்டது. எனவே இந்த நிகழ்ச்சியை 'இயந்திரப் புரட்சி' அல்லது 'தொழில் புரட்சி' என்கின்றனர். 'தொழில் புரட்சி' தோன்றினதால் இங்கிலாந்திலேயே எளிதாய், சரசமாய் எண்ணற்ற பருத்தி ஆடைகளைச் செய்யும் நிலைமை ஏற்பட்டது.

இந்த இயந்திரத் தொழில்தான் இந்திய நெசவுத் தொழில் அழிந்து படுவதற்கு முக்கியமான காரணம். இயந்திரத்தில் நெய்த துணிகள் இந்தியாவுக்குள் இறக்குமதியாகி உள்நாட்டுக் கைநெசவுத் துணியோடு போட்டி யிட்டது. சரசமான மினுக்கான மில் துணியின் முன்னே கட்டியான விலை கூடின நாட்டுத் துணி எதிர் நிற்குமோ? முதுமைக்கும் புதுமைக்கும் போட்டி. புதுமையே வென்றது.

இவையன்றியும் நாட்டுத் தொழில் அழிவதற்கு மற்றுமொரு காரணமுண்டு. புத்தடிமை மோகத்திலே

மேலை நாட்டுத் துணிகளை அணிவதே நாகரீக மென்ற ஒரு மடமையும் பரவிவிட்டது. இந்தப் பித்து தோட்டி முதல் தொண்டமான் தலை வரை ஏறினது. நாட்டுத் தொழில் அனுதை நிலை அடைந்தது.

ஆயினும் மிகப் பழைய கைத்தறியை மேல் நாட்டு இயந்திரத்தால் அறவே அழிக்க முடியவில்லை. கைநெசவுத் தொழில் இன்னும் குற்றுயிரோடேனும் இருந்துதான் வருகிறது. தனி மனிதர்களின் விருப்பத்திற்கேற்றபடி ஆடைகளை நெய்வது இயந்திரத்தாலாகாது. நுட்பமான வேலைப் பாடுகளையில் துணியில் அமைக்கமுடியாது. இயந்திர ஆடையினும் நாட்டுத் துணி வலுமிகுந்த தென்பதும் அனுபவத்திற் பலர் கண்டது. இன்று தேசிய உணர்ச்சி மறுமலர்ச்சி அடைந்துள்ளது. சர்க்கா இயக்கத்தை மகாத்மா காந்தி தொடங்கினது முதல் கைநெசவுத் தொழிலும் புத்துயிர் பெற்றது. நூறு நூருன மாறுபட்ட கைத்தொழில்கள் செழிப்புற்று ஓங்காத இந்தியாவிலே நெசவு போன்ற அதிக முதல் வேண்டாத கைத்தொழில்கள் பொருளாதார உறுதிக்கு இன்றியமையாதனவாம். ஆகவே எவ்வளவுதான் பஞ்சாலைகளும், பெருமில்களும் பெருகினும் கைத்தறிக்கு நம் நாட்டுப் பொருளாதார அமைப்பில் நிரந்தரமான ஓரிடம் உண்டு.

ஆனல் இப்பொழுது நம் கைத்தறித் தொழில் இடர் படுவது மேலைநாட்டு இயந்திரத்திலன்று.

அந்நாட்டு மில்கள் உயர்ந்த நம்பர் நூல்கள்கொண்ட சரக்குகளையே செய்து இறக்குமதி செய்கின்றன. இவற்றால் கைத்தறி நெசவு பாதிக்கப்படுவதில்லை. உள்நாட்டு மில்களே கைத்தறியின் முன்னேற்றத்தைத் தடை செய்கின்றன. கீழ்த்தர நம்பர் நூல்களில் போட்டி போடுவது இந்திய மில்களே. உயர்ந்த நம்பர் நூல்களை மில்கள் தமக்கு வைத்துக் கொண்டு தாழ்ந்த நம்பர் நூல்களைக் கைத்தறிகளுக்கு விட்டுவிடவேண்டும். இதற்கு இரு சாராரும் ஒரு ஒப்பந்தம் செய்துகொள்ள வேண்டும்.

அப்படி ஒப்பந்தஞ் செய்துகொள்வதானால் இரு சாரார்க்கு மட்டுமின்றி நாட்டுக்கும் நன்மை விளையும். உயர்ந்த நம்பர் நூல்களில் இந்திய மில்கள் ஈடுபடும்போது மேலைநாட்டுச் சரக்குகளின் இறக்குமதி குறையும். ஆகையால் மில் தொழிலுக்கு எவ்விதச் சோர்வும் நேரிடாது. போட்டி நின்றுவிட்டால் கைநெசவுத் தொழிலும் செழித்து நாட்டின் பொருளாதார நிலைமை உயரும்.

கைநெசவுத் தொழில் முன்னேறுவதற்கு வேறு சில இடையூறுகளும் இருக்கின்றன. நெசவுக்காரர்கள் போதிய கைமுதலில்லாமல் கடன்பட்டுத் திண்டாடுகிறார்கள். சரக்குகளைத் தகுந்த காலத்தில் தகுந்த இடங்களில் விற்கமுடியாமல் பல கஷ்ட நஷ்டங்களை அடைகிறார்கள். இவற்றைத் தீர்க்கக் கூட்டுறவு முறையே கைகண்ட மருந்து. சரக்குகளைத்

தகுந்தபடி காலமும் இடமும் கண்டு விற்பதற்கு விற்பனை நிபுணர்களை ஏற்படுத்த வேண்டும். இம் முறைகள் வெவ்வேறு மாகாணங்களிலும் கையாளப் பட்டு வருகின்றன. நம் மாகாணத்தைப் பொறுத்த வரையில் அவை போதிய பயனை அளித்துள்ளன. அதோடு மத்திய அரசாங்கமும் மாகாண அரசாங்க மும் பொருளுதவி செய்துள்ளன. ஆயினும் மேலே கூறிய போட்டி நில்லாதவரை இந்நன் முயற்சிகள் முழுப்பயனையும் தரமாட்டா.

நம் நெசவாளரிடம் மற்றுமொரு குறையுள்ளது: அறியாமையாலும் மூடப் பழக்கவழக்கங்களாலும் அவர்களுடைய வாழ்க்கை நிலை பல இடங்களில் மிகக்கேவலம் அடைந்திருக்கிறது. கலியாணம், இழவு முதலிய சடங்குகளுக்குக் கண்மூடித்தனமாய்க் கடன் படுவதும், அதற்காகக் கைத்தறியையும் அடகு வைத்து அதிக வட்டிக்கு உடன்படுவதும், கடைசியில் கைப்பொருளிழந்து தவிப்பதும் கண்கூடாகக் காணும் காட்சி. குடிபோன்ற கெட்ட பழக்கங்களில் பெரும்பாலார் அழிகின்றனர். கூட்டுறவு இயக்கத் தோடு இவர்களிடையே கல்வியும் பரவுதல் வேண்டும்; கட்குடியும் ஒழியும் வகை வேண்டும். சேலம் ஜில்லா வில் கட்குடி ஒழிந்ததால் நெசவாளர் நிலைமை முன்னேறியுள்ளது என்று விசாரணை செய்தோர் கூறுகின்றனர்.

கைநெசவுத்தொழில் இன்றும் நாட்டில் ஒரு முக்கியமான தொழில். நாட்டில் உற்பத்தியாகும்

மொத்தச் சரக்கில் நான்கிலொன்று கைத்தறியில் செய்யப்படுகின்றது................அநேக இலட்சம் தொழிலாளர்கள் இடுபட்டுள்ள தொழில். நாட்டின் புராதனத் தொழில். இந்தியாவின் புகழை நாட்டிய தொழில். நூல் மில்களுக்கு ஆதரவாக இருக்கும் தொழில். இயந்திரத்துக்கும் தறிக்கும் போட்டி வேண்டியதில்லை. இரண்டும் இருவேறு வகைச் சரக்குகளில் ஈடுபடலாம். வருங்காலத்தில் கைத்தறி பெருவாழ்வு அடைந்தால்தான் நாட்டின் பொருளாதார நிலை உறுதிப்படும்.

---

## 2. மில் நெசவுத்தொழில்

இங்கிலாந்து தேசத்தின் தொழில் வளர்ச்சிக்கு இலங்காஷயரிலும் மாஞ்சஸ்டரிலும் ஏற்பட்ட நெசவு மில்களே சிறந்த காரணம். இந்தியாவின் தொழில் வளர்ச்சிக்குப் பம்பாயிலும் பிற இடங்களிலும் தோன்றிய நெசவு மில்கள் சிறந்த காரணம்.

இந்தியாவில், 1851 லிருந்துதான் மில் தொழிலின் சரித்திரம் தொடங்குகிறது. கௌவாஸ்ஜி நாநாபாய் தாவர் என்ற ஒரு பார்சி முதலாளி குறித்த ஆண்டில் பம்பாயில் ஒரு நூல் மில்லை நிறுவினார். பின்னர் பல மில்கள் புறப்பட்டன. ஆனால் 1878-ம் ஆண்டுவரை தொழிலில் அதிக முன்னேற்றமில்லை. போதிய முதலில்லாததே முக்கியத்

தடை. தோன்றிய மில்கள் பெரும்பாலும் நூல் மில்களே. நெசவு மில்கள் சிறுபான்மையன. நூல் சீனவுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டது. உள்நாட்டுத் தேவையைக் கருதி உற்பத்தி செய்யப்படவில்லை. மில்கள் எல்லாம் பம்பாயும் அதனை அடுத்த இடங்களிலுமேதான் நிலைபெற்றன. 1878 முதல் மில் தொழில் தலையெடுக்கலாயிற்று. 1887-ல் ஜெ. என். டாட்டா நாகபுரியில் "எம்பிரஸ் மில்" லைத் தொடங்கினர். அதற்குப்பிறகு நாடெங்கும் பல இடங்களில் துணி மில்கள் தோன்றின. 1878-ல் 53 மில்களே இந்தியாவிலிருந்தன. 1900-ல் 193 மில்களாகிவிட்டன. நாணயமாற்று விகிதத்தில் 1878-க்கும் 1893-க்கும் இடையே ஏற்பட்ட சலுகையால் இந்திய ஏற்றுமதி வர்த்தகம் தலையெடுத்தது அதனோடு மில் தொழிலும் வளர்வதாயிற்று.

ஆயினும் இந்த வளர்ச்சிக்கும் பல இடையூறுகள் நிகழ்ந்தன. இந்திய மில் தொழிலின் வளர்ச்சி இலங்காஷயர் மில் முதலாளிகளின் கண்ணை உறுத்தியது. 1859-முதல் துணிகளின்மீதும் நூல் தினுசுகள் மீதும் இந்திய அரசாங்கத்தார் வருமானங் கருதி இறக்குமதி வரிகள் போட்டுவந்தனர். 'இந்த இறக்குமதி வரிகள்தான் இந்திய மில் தொழிலுக்குக் காப்பு வரிகளாய் நின்று அதைச் செழிக்கச் செய்கின்றன. ஆகவே அவற்றை ஒழிக்கவேண்டு' மென்று இலங்காஷயரில் கூக்குரல் பிறந்தது. இறக்குமதி வரிகள் அவர்கள் விருப்பப்படியே எடுக்கப்பட்டன.

வரிகள் ஏற்பட்டதனால் மில்தொழில் பாதிக்கப்படவில்லை. ஏனென்றால் இந்த வரிகளால் மில்தொழிலுக்கு எவ்விதப் பாதுகாப்புமே உண்டாயிருக்கவில்லை. இந்திய மில்களில் உற்பத்திசெய்யப்பட்டன வெல்லாம் குறைந்த நம்பர் நூல்களே, வரிகளால் பாதிக்கப்பட்டன வெல்லாம் உயர்ந்த நம்பர் சரக்குகளே.

இலங்காஷயர் முதலாளிகள் வேறொரு வழியிலும் இந்தியத்தொழில் வளர்ச்சியை மட்டுப்படுத்த முயன்றார்கள் 'இந்திய மில்களில் தொழிலாளிகளை அதிக நேரம் வேலை வாங்குகிறார்கள். கூலி மிகக் குறைவாகக் கொடுக்கிறார்கள். இதைத் தடுக்க வேண்டும்' என்று கிளர்ச்சி செய்தார்கள். இந்திய அரசாங்கமும் அவர்களுக்கிணங்கி 1881-ல் முதலாவது ஆலைச்சட்டத்தை நிறுவியது. ஆடு நனைந்ததென்று ஓநாய் கண்ணீர்விட்ட கதை இது.

வேறு சில இடையூறுகளும் இந்திய மில்தொழிலுக்குத் தோன்றின. பெரும்பாலனவாகிய மில்களும் சீனவுக்கு வேண்டிய நூல் உற்பத்தி செய்வதிலேயே ஈடுபட்டிருந்தன என்று மேலே குறிக்கப்பட்டது. 1893-க்குப் பிறகு நாணயத் திட்டத்தில் பெருத்த மாற்றம் ஏற்பட்டது. அதனால் சீனவுக்கு அனுப்பி வந்த ஏற்றுமதி திடீரென்று குறைந்தது. இதற்கிடையில் ஜப்பானியரும் சீனரும் தாங்களே நூல் மில்களையும் நெசவு மில்களையும்

ஏற்படுத்திக்கொண்டு இந்தியா இழந்த சீனச்சந்தையைக் கைப்பற்றிக் கொண்டார்கள். கடைசியாகச், சென்ற நூற்றாண்டின் இறுதியில் நம் நாட்டின் பல பாகங்களில் பஞ்சமும் நோயும் மக்களை நலிந்தன. பிளேக் கொள்ளையில் மில் தொழிலாளர் பலர் மாண்டனர். துணிமணிகளை வாங்கி உடுத்தும் நாட்டு மக்கள் பலர் இறந்தனர்.

இவ்வளவு பாலப் பிணிகளையும் கடந்து இந்தியமில் நெசவுத் தொழில் முன்னேற்றம் அடைந்தது மெச்சுதற்குரியதே. வெளிநாட்டிலிருந்து இறக்குமதியான உயர்ந்த தரச் சரக்குகளுக்கும் உள் நாட்டுத் தறியில் உற்பத்தியான மிகக் குறைந்த நம்பர்ச் சரக்குகளுக்கும் இடையேயுள்ள நடு இடத்தை இந்திய மில் தொழில் பற்றிக்கொண்டது.

அடுத்த 15 ஆண்டுகளில் மில் தொழில் மேலும் வளர்ந்தது 1905-ல் திலகர் தொடங்கின சுதேசி இயக்கமே இந்தப் பயிர்க்குத் தண்ணீர் வார்த்தது. 1900-ல் 193 மில்கள் இருந்தன. 1913-ல் 271 ஆகிவிட்டன. தொகையில் மட்டுமின்றித் தொழிலிலும் வளர்ச்சி காணப்பட்டது. முன்னிலும் துணி மில்கள் அதிகரித்தன; நூல் மில்கள் குறைந்தன. பம்பாய்க்குப் புறம்பாகவும் மில்கள் தோன்றத் தொடங்கின. 1914-ல் பருத்தி நெசவுத் தொழிலில் உலகத்தில் நான்காவது நாடாக இந்தியா இடம் பெற்றுவிட்டது;

அந்நிலையில் மகா யுத்தம் வந்தது; இந்திய மில் தொழிலுக்கு எதிர்பாராத அதிர்ஷ்டம் பிறந்தது. இலங்காஷயர் சரக்குகள் இறக்குமதியாக முடிய வில்லை. தமக்கு வேண்டிய சரக்குகளுக்கெல்லாம் இந்திய மில்களிடமே அரசாங்கத்தார் ஆர்டர் கொடுத்தார்கள். ஆயினும் அதிகப்படியான புது மில்கள் தோன்றவில்லை. ஏனெனில் இயந்திரங் கள் எளிதாக இறக்குமதி யாகவில்லை. இருந்த மில்கள் மட்டும் பெருத்த லாபத்தை அடைந்தன.

இந்தச் செழிப்பு யுத்தம் நின்ற பிறகுங்கூட ஒன்றிரண்டு ஆண்டுகள் வரை தொடர்ந்து இருந் தது. 1920-ல் இந்திய மில் தொழில் உச்ச நிலையை அடைந்ததென்று சொல்லலாம். நூற்றுக்கு 13 முதல் 180 வரை இலாபம் கிடைத்தது. நூற்றுக்கு முப்பது சராசரி இலாபம். தொழிலாளர் கூலி உயர்ந்தது. அவர்கள் வேலை நேரம் 12 மணி யிலிருந்து 10 மணியாகக் குறைந்தது. 1900-ல் நாட்டுக்குத் தேவையான துணியில் நூற்றுக்கு 9 தான் இந்திய மில் மூலம் சப்ளையாயிற்று. மீதத்துக்கு இறக்குமதிச் சரக்கு 64 பங்கும், கைத்தறிச் சரக்கு 27 பங்குமாக நிரம்பியது. 1921-ல் நாட்டின் தேவை யில் 42 பங்கு இந்திய மில் துணிகளால் சப்ளையாகி விட்டது. 64 பங்கிருந்த இறக்குமதி 26 பங்கு ஆகி விட்டது. இந்தப் புள்ளி விவரங்களிலிருந்து உள் நாட்டு மில் தொழில் எவ்வளவு முன்னேற்றமடைந் தது என்பது தெளிவாகும்.

1923-லிருந்து இந்திய மில் தொழிலுக்கு இடிவு வந்தது. 1922-ல் பம்பாயிலுள்ள மில்களின் இலாபம் சுமார் 4 கோடி ரூபாய். 1923-ல் 33 இலட்சம்; 1924-லோ 92 இலட்சம் நஷ்டம்; 1925-ல் 135 இலட்சம் நஷ்டம். அகமதபாத் போன்ற மற்ற இடங்களிலுள்ள மில்கள் இவ்வளவு மோசம் போகவில்லையாயினும் எங்கும் தொழில் மந்தம் ஏற்பட்டது.

செழித்து வந்த ஒரு தொழிலுக்குத் திடீரென்று இவ்வாறு ஆபத்து நேர்ந்தமைக்குப் பல காரணங்களுண்டு. பெருக்கமே சிறுமைக்கு ஒரு காரணம். யுத்த காலத்தும் அதற்குப் பின்னும் மில்கள் ஏராளமான இலாபம் கொடுப்பதைக் கண்டு பலர் கண்டகண்டபடி புதுப்புது மில்களைத் தொடங்கினார்கள். தேவைக்கு அதிகமான முதலை இலாபகரமென்று கருதி மில் தொழிலில் முடக்கினார்கள். பேராசை பெரு நஷ்டத்துக்குக் காரணமாகிவிட்டது.

யுத்த காலத்தில் உற்பத்திச் செலவு உயர்ந்துவிட்டது; ஆட்கள் கூலி அதிகமாய்விட்டது: பருத்தியின் விலை ஏறிவிட்டது. இலாபம் குறைந்த உடனே கூலியைக் குறைக்க முடியவில்லை. 1924-லிலும் 1925-லும் மில் முதலாளிகள் கூலியைக் குறைக்க முயன்றனர். பம்பாய்த் தொழிலாளர் இருமுறை வேலை நிறுத்தம் செய்தனர்.

1923-ல் ரூபாயின் நாணய விகிதம் மாற்றமடைந்தது. முன்பு 16 பென்சு பெறுமானமாக

இருந்தது 18 பென்சாக உறுதிப்படுத்தப்பட்டது. இதனால் இறக்குமதி ஓங்கியது; ஏற்றுமதி தளர்ந்தது; தொழிலில் ஏற்பட்ட மந்தமும் வலுத்தது.

ஆனால் யாவற்றிற்கும் தலையான காரணம் ஜப்பானின் போட்டியாகும். ஜப்பானின் போட்டி ஒரு விந்தையாகும். ஜப்பானிலோ பருத்தி கிடையாது. அமெரிக்காவிலிருந்தும் நம் நாட்டிலிருந்தும் பருத்தியை வாங்கிக், கடல் கடந்து கொண்டு போய் நூலாக்கித், துணியாக்கி மீண்டும் நம் நாட்டுக்குக் கொண்டுவந்து, இங்குள்ள இறக்குமதி வரி, காப்பு வரி எல்லாம் கடந்து நமது மில் சரக்குகளை விடக் குறைந்த விலைக்கு விற்க ஜப்பானுக்கு எப்படிக் கட்டுப்படியாகிறது?

ஜப்பானிலே தொழிலாளிகளை நெடுநேரம் வேலை வாங்குகிறார்கள். இந்தியாவிலோ நாளொன்றுக்கு 10 மணி நேரத்துக்கு மேலாக வேலை வாங்கலாகாதென்ற சட்டம் கண்டிப்பாய் அமுலில் இருக்கிறது. மேலும் இந்தியாவிலே கொடுக்கும் கூலியை விட ஜப்பானில் குறைவாகும். ஏராளமான பெண்கள் மில்களில் வேலை செய்கிறார்கள். ஜப்பானியச் சமூக அமைப்பு அதற்கு இடந்தருகிறது. இந்தியாவில் சுமார் 4 ஆண்கள் மில் வேலை செய்தால் ஒரு பெண்ணே வேலை செய்கிறாள். ஜப்பானில் ஒரு ஆணுக்கு 4 பெண்கள் வீதம் வேலை செய்கிறார்கள். பெண்களுக்குக் கூலி குறைவு. அதிகமாகப்

பெண்களை வேலைக்கு அமர்த்திக் கொண்டால் கொடுக்கவேண்டிய கூலித்தொகையும் குறைவாகும். ஜப்பானில் பத்து மணி நேரத்துக்கொருமுறையாக இரவும் பகலும் மில்கள் வேலை செய்கின்றன. இந்தியாவில் இது முடியாது. இரவு இங்குத் தொழிலாளர் வேலைக்கு வருவது கஷ்டம். வந்தாலும் பம்பாய் போன்ற நகரங்கள் இடங்கொடா. இயற்கனவே வீடுவசதியில்லாமல் பெருங்கஷ்டமிருக்கிறது. ஜப்பானின் சீதோஷ்ண நிலைமையும், ஜப்பானியரின் உணவு முறையும் ஜப்பானியத் தொழிலாளிக்கு இந்தியத் தொழிலாளியைவிடச் சாதகமாக இருக்கின்றன.

ஜப்பானியரின் கொள்முதல் முறையும் விற்பனை முறையும் இந்தியரிடமில்லை. மொத்தமாகப் பலர் சேர்ந்து கூட்டுறவு முறையில் இறக்குமதி செய்கிறார்கள்; ஏற்றுமதி செய்கிறார்கள். ஒவ்வொன்றுக்கும் பெரிய சங்கங்கள் சட்டப்படி நிறுவியுள்ளார்கள். பம்பாய் பட்டணத்துக்கும் பருத்தி விளையும் உள் நாட்டுப் பக்கங்களுக்குமுள்ள வண்டிச் சத்தம் ரயிற் சத்தங்களைவிட இந்தியாவுக்கும் ஜப்பானுக்குமுள்ள கப்பற் சத்தம் அதிகமல்ல. ஷோலாப்பூருக்கும் பம்பாய்க்குமுள்ள ரயிற்கூலிதான் இந்தியாவுக்கும் ஜப்பானுக்குமுள்ள கப்பற்கூலி. அமெரிக்கா இந்தியா ஆகிய இருவேறு இடங்களில் இருவேறு வகைப் பருத்தியை வாங்கி ஜப்பானில் இரண்டையும் நுட்பமாகக் கலக்கிறார்கள். இந்தக் கலப்பு

முறையை இந்தியர் இன்னும் கையாளவில்லை. இவற்றோடு ஜப்பான் அரசாங்கமும் பல வழிகளில் ஒத்தாசை செய்வதாகச் சொல்லப்படுகிறது. நாணய விகிதத்தில் மாற்றங்கள் ஏற்படுத்தியும், வரிச் சலுகைகள் காட்டியும், கப்பல் தொழிலுக்கு ஏராளமான மானியம் அளித்தும், பலவாறாகத் தொழில் முன்னேற்றத்துக்கு அரசாங்கம் துணை புரிகின்றதாம்.

பம்பாய் மில்தொழில் சோர்வடைவதற்கு ஒரு அடிப்படையான காரணம் அதன் நிர்வாகக்குறையாகும். பெரும்பாலும் மில்களைத் தொடங்குவதற்கு முதல் இட்டவர்கள் "மானேஜிங் ஏஜண்டுகள்" என்று சொல்லப்படும் ஒரு சில முதலாளிகளாவர். தொழிலைத் தொடங்குவதற்கு மட்டுமன்றி, அதைத் தொடர்ந்து நடத்துவதற்கும் இவர்கள் அவ்வப்போது முதல் போட்டு வந்தனர். பல தடவைகளில் இது ஆபத்தாக முடிந்தது. ஒரே மானேஜிங் ஏஜன்ஸிக் கடைக்காரர்களே பல மில்களின் நிர்வாகத்தை ஏற்கும்போது எல்லாவற்றுக்கும் வேண்டிய முதலைப் போடுவதென்றால் எளிதன்று. பம்பாயிலுள்ள 83 மில்களில் 23 மில்களின் நிர்வாகம் இரண்டு மானேஜிங் ஏஜண்டு கடைக்காரர்களிடம் இருந்ததென்றால் எவ்வாறு தொழில் ஒழுங்காக நடைபெற முடியும்? மானேஜிங் ஏஜண்டுகள் தாம் நிர்வகிக்கும் தொழிலில் விசேஷ ஞானமுடையவரல்லர். இலாபம் ஒன்றே அவர்கள் கோருவது.

கம்பெனிகளின் டைரக்டர்கள், தணிக்கையாளர் முதலியோரைத் தம் கைக்குள்ளேயே வைத்துக் கொண்டு மனம்போல் சுயநலம் பேணி வந்தனர். மானேஜிங் ஏஜண்டு ஸ்தானமும் குடும்பச் சொத்தென்று கருதப்பட்டதால், ஆற்றலும் அறிவுமுள்ளவர் தொழில் நிர்வாகத்தை மேற்கொள்ளச் சந்தர்ப்ப மில்லாது போயிற்று.

பருத்தி மில் தொழிலின் சீர்கேடான நிலைமையை அரசாங்கம் விசாரணை செய்து ஆவன செய்ய வேண்டுமென்று ஒரு கிளர்ச்சி எழுந்தது. யுத்தகாலத்துக்கு முன் வெளிநாட்டுத் துணிச் சரக்குகளின் மேல் 3½ சதமானம் இறக்குமதிவரி போடப் பட்டிருந்தது. இது உள்நாட்டு வருமானத்துக்காகப் போட்ட வரியேதவிரக் காப்பு வரியன்று. ஏனென்றால் இறக்குமதிவரிக்குச் சரியாக 3½ சதமானம் உள்நாட்டு வரியும் சுமத்தப்பட்டது. 1917-ல் வருமானத்தை உத்தேசித்து இறக்குமதிவரி 7½ சதமானமாக உயர்த்தப்பட்டது. 1920-ல் 11 சதமானமாயிற்று. இந்தக் காலத்தில்தான் மில்தொழில் ஓங்கி நின்றதும், உள் நாட்டுப் பருத்தி வரி (Cotton Excise duty) மட்டும் எடுபடவில்லை. தொழிலில் மந்தம் வந்ததும் உள்நாட்டுப் பருத்தி வரியை எடுக்க வேண்டுமென்ற கிளர்ச்சி பிறந்தது. 1925-ல் பம்பாய் ஆலைத் தொழிலாளர் சம்பளக் குறைவுக்காக வேலை நிறுத்தம் செய்த உடனே, உள்நாட்டுப் பருத்தி வரி இருக்கும் வரையும் உயர்ந்த கூலி

கொடுத்தால் கட்டிவராதென்று முதலாளிகள் சாதித்தனர். எனவே அரசாங்கத்தார் உள்நாட்டுப் பருத்தி வரியை எடுத்துவிட்டார்கள்.

என்றாலும் தொழில் தலைதூக்கவில்லை. ஜப்பானின் போட்டி நாளுக்குநாள் முறுகிக்கொண்டிருந்தது. கடைசியாக இந்திய அரசாங்கத்தார் 'டாரிப் போர்டு' என்று சொல்லப்படும் வரிக்குழுவை 1927-ல் நியமித்தார்கள். போர்டார் இன்னின்ன வழிகளில் பம்பாய் மில்கள் சீர்திருத்தம் செய்துகொள்ள வேண்டுமென்று விரிவாக எடுத்துக் காட்டினரேனும், அரசாங்கம் செய்யவேண்டியதைப் பற்றி ஒருமனப்பட்ட கருத்தை வெளியிடவில்லை. கடைசியில் அரசாங்கத்தாருக்கும் முதலாளிகளுக்கும் நடந்த கடிதப் போக்குவரத்தின் பயனாக 1927-ல் ஒரு சில சலுகைகள் காட்டப்பட்டன. இறக்குமதியாகும் நூலின் மீது ஒரு சிறுவரி (இராத்தலுக்கு $1\frac{1}{2}$ அணா விகிதம்) விதிக்கப்பட்டது. மில் இயந்திரங்கள் மீது போடப்பட்டிருந்த இறக்குமதி வரிகளும் எடுக்கப்பட்டன. 1928-ல் ஒரு வர்த்தகத் தூதுகோஷ்டி ஆப்பிரிகா, மலயா முதலிய கீழ் நாடுகளுக்குச் சென்று இந்தியச் சரக்குகள் விற்பனையாவதற்கு வேண்டியவற்றைச் செய்தன.

போர்டாரின் சிபார்சுகளைப் பின்பற்றி முதலாளிகள் பல சீர்திருத்தங்களைச் செய்ய முனைந்தனர். அதிகக் கூலியாட்கள் இல்லாத முறையில் ஓடும் புது

இயந்திரங்களைக் கோக்க முயன்றூர்கள். இதனால் பல தொழிலாளருக்கு வேலையில்லாது போயிற்று. 1928-ல் பெரிய வேலை நிறுத்தம் நடந்தது. அதைத் தொடர்ந்து அடுத்த ஆண்டில் மீண்டும் தொழிலாளர் வேலை நிறுத்தம் செய்தார்கள். இதற்கிடையில் அரசியல் காரணங்களுக்காகவும், வேலை நிறுத்தச் சட்டப்படிக்கும் தொழிலாளர் தலைவர்கள் சிறைப் படவே மீண்டும் அமைதி நிலவியது.

அரசாங்கம் எடுத்த முயற்சிகள் சிறிது பலனைக் கொடுத்தன. தகுந்தபடி உயர்ந்த காப்பு வரி சுமத்தாதவரை மில் தொழிலின் தளர்வு நீங் காது என்ற நிலைமை உறுதியாக ஏற்பட்டு விட்டது. 11 சதமானமாக, வருமானத்தை மட்டும் உத்தேசித்து ஏற்பட்டிருந்த இறக்குமதி வரியைப் பாதுகாப்புக் கருதி 15 சதமானமாக 1930-ல் அரசாங்கத்தார் உயர்த்தினர். இந்தியத் துணிகளோடு போட்டி யிடும் பிரிட்டிஷ் பீஸ் துணி மீதுதான் இந்தக் காப்புவரி. ஏனைய நாட்டுப் பீஸ் துணிகள் 20 சத மானம் இறக்குமதி வரி செலுத்த வேண்டியதாகி விட்டது.

இந்த காப்புவரிகளைத் தொடர்ந்து 1931-ல் காந்தி அடிகளின் சத்யாக்கிரகப் போர் வந்தது. சுதேச உணர்ச்சியும், விதேசச்சரக்குப் பகிஷ்கார மும் காப்புவரி என்னும் கோட்டைக்கு ஆதரவாய் நின்று மில் தொழிலை வளர்த்தன. தொழிலில்

ஏற்பட்ட சோர்வு மெல்ல மெல்ல நீங்கத் தொடங்கியது. பம்பாய் மில் தொழில் பற்பல காரணங்களால் பின்னடைந்தே இருப்பினும் நாட்டின் பிற பக்கங்களிலுள்ள மில்கள் செழித்து வரலாயின. 1914-18 யுத்தகாலத்துக்கு முன் நாட்டுக்கு வேண்டும் துணியில் முக்கால் பங்கு இறக்குமதி செய்யப்பட்டது; கால் பாகம்தான் இந்திய மில்களில் உற்பத்தியானது. இப்பொழுது நிலைமை நேர்மாறாக ஆகிவிட்டது. இலங்காஷயர் இறக்குமதி ஆண்டாண்டு தோறும் குறைந்து வருகின்றது.

இந்திய மில் தொழிலுக்கு வருங்காலத்தில் பெருவாழ்வு இருக்கிறது. ஆயினும் பம்பாய் மில் தொழில் இனி முன்னணியில் நிற்குமோ என்பது சந்தேகந்தான். பம்பாய்க்குப் புறத்தேயுள்ள மில்களுக்குப் பல செளகரியங்கள் இருக்கின்றன. பம்பாய் ஒரு பெரு நகரம். தொழிலாளர் கூலி அதிகம். அவர்கள் தொல்லை அடிக்கடி உண்டாகிக் கொண்டே இருக்கும். ஆகவே வருங்காலத்தில் பிற இடங்களிலுள்ள மில்கள்தான் தழைத்தோங்க இடமுண்டு. ஜலமின்சார வசதி மிகுந்தபிறகு, தென்னாட்டில் திருப்பூர், கோயமுத்தூர் முதலிய இடங்களில் பருத்தித்தொழில் தலையெடுத்திருக்கிறது. மில் நெசவுத் தொழிலில் வருங்கால இந்தியாவில் கோவை தனி இடம் பெறும் என்பது உறுதி.

---

## 3. சணல்

முகலாய மன்னர் காலத்திலிருந்துதான் சணல் ஒரு முக்கியமான பொருளாயிற்று. போர் முறையில் நால் வகைப் படையொடு ஐந்தாம் படையாக வெடிக் குண்டை முதன்முதல் இந்தியாவிற் புகுத்திய பெருமை பாபர் மன்னருக் குரியதென்பர். அன்று முதல் கோணிப்பைகளின் (gunnies) அவசியம் அதிகரித்தது. குண்டுகள் நுழையா வண்ணம் காவற் சுவர்களை எழுப்புவதற்கு மணல் பொதிந்த கோணிப்பைகளைத்தவிர வேறு சாதனம் இல்லை. யுத்தத்தோடு வந்த கோணிப்பை வர்த்தகத்துக்கும் பயன் படலாயிற்று. கிழக்கு இந்தியக் கம்பெனியார் வர்த்தகம் நடத்தியபோது கோணிப்பைகளின் தேவை மிகுந்தது. அந்தக் காலத்தில் அது ஒரு குடிசைத் தொழிலாகவே இருந்தது. வங்காளத்தில் இந்துக்கள் வீடுகளிலும் முஸ்லிம்கள் வீடுகளிலும் கைத்தறிகளில் கோணிகள் நெய்யப்பட்டு வந்தன.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் உலக வர்த்தகம் பெருகத் தொடங்கியது. பற்பல தேசத்தினர் திரைகடலோடிப் பெருவாணிபம் தொடங்கினர். அமெரிக்கா ஆஸ்திரேலியா முதலிய தூரதேசங்களிலிருந்து இங்கிலாந்து போன்ற இடங்களுக்குத் தானியங்கள் ஏற்றுமதியாகத் தொடங்கியது. கோணிப்பைகள் முன்னிலும் மிகுதியாக வேண்டப்

பட்டன. ஆயினும் 1838-முதல்தான் மூலப்பொருளாகிய சணலுக்கு முக்கியம் ஏற்பட்டது. ஸ்காட்லந்தில் டண்டீ என்ற இடத்திலே சணல் மில்களை நிறுவி இந்திய மூலப்பொருளைக் கொண்டுபோய்க் கோணியாக நெய்யத் தொடங்கினர்கள். மில் கோணிக்கும் கைநெசவு கோணிக்கும் போட்டி எழுந்தது. டண்டீயில் எழுந்த போட்டியால் மூலப் பொருளின் விலையும் ஏறிவிட்டது. பின்னர் வங்காளத்திலேயே சணல் மில்கள் எழுந்தன. இருபுறத்து நெருக்கடிக்கும் ஆற்ருது கைநெசவுத் தொழில் அழிந்தது. பருத்தித் துணி நெய்யும் கைத்தறித் தொழிலைப்போல் நாடெங்கும் பரவிய ஒரு தொழிலாகக் கோணித் தறித்தொழில் இருக்கவில்லை. சுதேச இயக்கம், விதேசச் சரக்குப் பகிஷ்காரம் போன்ற ஆதரவுகளை அது பெறவில்லை. தனி மனிதர்களின் விருப்பத்துக்கேற்ற ஆடைகளை நெய்வதற்குத் துணித் தறியில் இடமிருப்பதுபோல் கோணித் தறியிலில்லை. எனவே துணித்தறிகள் வாழ்கின்றன; கோணித் தறிகள் அழிந்தன.

1855-வரையில் இந்தியாவில் சணல் மில்கள் தோன்றவில்லை. அதற்கு வேண்டிய நிலக்கரி, இயந்திரம், இயந்திர அறிவுள்ள தொழிலாளர் முதலியோர் இல்லாததே காரணம். கிழக்கிந்திய ரயில் வேக்கு நிலக்கரி வேண்டியதாகவே, 1854-ல் ராணிகஞ்சு என்ற இடத்தில் நிலக்கரிச் சுரங்கங்கள்

வெட்டி யெடுக்கப்பெற்றன. நிலக்கரி தோன்றிய தும் (Hugli) உகளியாற்றின் இயற்கை எழிலொழுகும் இருகரைகளிலும் கரும்பூதங்கள்போல் அநேக சணல் மில்கள் விரைவில் எழுந்தன.

இலங்கை காப்பித்தோட்ட முதலாளிகளில் ஒருவரான ஜார்ஜ் ஆக்லந்து என்பவர் 1852-ல் ஸ்காட்லந்துக்குப் போயிருந்தபொழுது வங்காளத்தில் சணல் மில் தொடங்கும் வகையைப்பற்றிச் சிந்தித்தார். வேண்டிய இயந்திரங்களையும் விற்பன்னரான தொழிலாளரையும் டண்டீயிலிருந்து ஏற்றிக்கொண்டு கல்கத்தாவை அடைந்தார். சிராம்பூருக்கு அருகில் 'ஈஷ்ரா' என்ற இடத்தில் மில்லை நிறுவினார். இப்பொழுது அந்த மில் 'வெல்லிங்டன் மில்ஸ்' என்ற பெயரோடு விளங்குகிறது. இதைத் தொடர்ந்து இன்னும் பல ஐரோப்பியர் கல்கத்தாவின் இருமருங்கிலும் சணல் மில்களை ஸ்தாபித்தனர். பெரும்பாலான சணல் மில்களும் இன்று ஐரோப்பியர் கையிலேயே இருக்கின்றன. பருத்தி மில்களுக்கும் சணல் மில்களுக்கும் இருக்கும் ஒரு குறிப்பிடத்தகுந்த வித்தியாசம் இதுவாகும்.

இந்திய மில்களில் முதலில் நெய்யப்பட்ட கோணிகள் மிகத்தாழ்ந்த தரத்தனவாயிருந்தன. நாளாவட்டத்தில் அவை நயமடைந்து டண்டீச் சரக்கோடு போட்டியிடும் நிலைக்கு வந்துவிட்டன. கோணி ஏற்றுமதி பெருகியது. பல புது மில்கள் தோன்றின.

போட்டி வளர்ந்தது. உற்பத்தி அதிகரித்தது: சணல் ஆலைச் சங்கமொன்று நிறுவப்பட்டது. அதின் மூலம் முதலாளிகள் போட்டியை மட்டுப்படுத்திக் கொண்டார்கள். 1894-லிருந்து தொழில் செழிப்ப தாயிற்று. பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் வங்காளத்தில் தோன்றிய பஞ்சத்துக்கும் பிளேக் நோய்க்கும் தப்பி, இந்தியச் சணல் மில்கள் டண்டீயோடு தீவிரப் போட்டியில் இறங்கின. டண்டீ முதலாளிகள் அஞ்சினர்; இந்தியத் தொழிலாளர் நிலைமையைச் சீர்திருத்த ஆர்வமுற்றனர். ஆலைச் சட்டம் நிறுவவேண்டுமென்று கூக்குரலிட்டனர். அரசாங்கத்தாரும் அவருக்கிசைந்து 1911-ல் ஆலைச் சட்டமொன்றை அமுலுக்குக் கொண்டுவந்தார்கள். எனினும் 1914-வரை இந்தியத் தொழிலை அசைக்க முடியவில்லை.

ஐரோப்பிய மகாயுத்தம் சணல் தொழிலுக்கு மெத்த நன்மையாக முடிந்தது. மணல் நிறைந்த கோணிப்பைகளுக்கு மட்டற்ற தேவை பிறந்தது. கான்வஸ் முதலிய சரக்குகள் முன்னிலும் பன் மடங்கு வேண்டப்பட்டன. ஆனால் ஜர்மனி போன்ற பகை நாடுகளோடு நடந்து வந்த வியா பாரம் தடைபட்டுவிட்டது. ஏற்றுமதி இறக்குமதி வசதிகளுக்கும் இடர்ப்பாடு உண்டாயிற்று. ஆயினும் தொழில் தளரவில்லை. யுத்தகாலத்தில் ஏற்பட்ட பணமுடையால் 1916-ல் சணல்மீது ஏற்றுமதி வரி விதிக்கப்பட்டது. 1917-ல் இது உயர்த்தப்பட்டது.

ஆயினும் இவற்றுலெல்லாம் தொழிலுக்கு ஊனம் ஏற்படவில்லை. உலகத்திலேயே அதற்கு இருந்த ஏகபோக உரிமையே அதன் தளராத நிலைமைக்குக் காரணம். யுத்தம் முடிந்த பிறகு மற்றத் தொழில்களுக்கு ஏற்பட்டது போலவே சணல் தொழிலிலும் சிலகாலம் செழிப்பு நிலவிப் பின்னர் சோர்வு வந்தெய்தியது. ஆனால் சணல் ஆலைச் சங்க மூலமாக ஒன்றுபட்டு உற்பத்தியை மட்டுப்படுத்திக் கொண்டு தொழில் தளராமல் ஒருவாறு சமாளித்து விட்டார்கள். 1930-ல் வந்த உலகப் பொருளாதார மந்தம் வங்காளச் சணல் மில் தொழிலையும் தாக்கியது.

இதுவரையும் ஒருமனப்பட்டு உற்பத்தியை மட்டுப்படுத்திக் கொண்டு தொழிலைத் தளரவிடாமல் நடத்தி வந்ததுபோல் இனிமேல் நடத்துவது கஷ்டம். நெடுங்காலமாக இந்தியச்சணல் ஒப்புயர்வற்று உலகச்சந்தையில் தனியாட்சி செலுத்தி வந்தது. இந்த ஏகாதிபத்தியத்துக்கு ஆட்டம் ஏற்பட்டுவிட்டது. சணல் சரக்குகளுக்குப் பலவழிகளில் போட்டிகள் தோன்றிவிட்டன. பெரு வியாபாரத்தில் கோணிகளே இல்லாமல் தானியங்களை மொத்தமாக "எலிவேற்றர்"களில் எடுத்துச்செல்லும் பழக்கம் ஏற்பட்டு வருகிறது. கோணிப்பைகளுக்குப் பதிலாக இப்பொழுது காகிதம், துணிபோன்றவற்றை உபயோகிக்கும் பழக்கமும் ஏற்பட்டுக் கொண்டிருக்கிறது. இவற்றுல், அமெரிக்கா முதலிய நாடுகளில் இந்தியச்

சணற் சரக்குகளுக்கிருந்த தேவை குறைந்து வருகிறது.

சணல் மில் முதலாளிகளிடமும் முன்னிருந்த ஒற்றுமை மெல்லக் குலேகிறது. அவர்களுடைய சங்கவிதிகளுக்குக் கட்டுப்படாமல் பல புது மில்கள் தோன்றியுள்ளன. இந்தப் புது மில்கள் உற்பத்தியைக் கட்டுப்படுத்த இசையவில்லே சட்ட மூலம் இவற்றை அரசாங்கம் கட்டுப்படுத்த வேண்டுமென்று சங்கம் கோரியது. இயந்திரங்களைத் திருத்தி அமைத்தாலல்லது தாம் தலேயிட முடியாதென்றனர் அரசாங்கத்தார். இனிமேல் உற்பத்தியை மட்டுப் படுத்துவதிற் பயனில்லே என்று கருதி 1936-லிருந்து காலவரையறை இல்லாமல் வேலே செய்யச் சங்கம் தீர்மானித்தது

சணல் மில் தொழிலிலே தொழிலாளர் பிரச்னே சமீப காலங்களில் வலுத்து வருகிறது. வங்காளிகள் இந்த ஆலேகளிற் போய்க் கூலிவேலே செய்வதில்லே. ஆகவே வெகு தொலேவிலிருந்து தொழிலாளர் வரவேண்டிய நிலேமையிலிருக்கிறது. தொலேவிலிருந்துவரும் தொழிலாளர் சொந்த வீட்டை நோக்கி அவ்வப்போது போய் வருகிறார்கள். இதனுல் மில் வேலே தடைபடுகிறது. சணல் தொழிலாளரைத் திரட்டுவதற்குக் கையாளும் முறையும் மிக மோசமானது. "சர்தார்"களென்று சொல்லப்படும் கங்காணிகள் தொழிலாளருக்கு முன் பணம் கொடுத்து அவர்களேக் கடன் குழியில் வீழ்த்திப் பொருளாதாரச்

சுதந்திரம் அற்றவர்களாக ஆக்கி விடுகிறார்கள். தொழிலாளர் பெறும் கூலியும், வாழ்க்கை வசதியும், சுற்றுச் சார்புகளும் மிகக் கேவலமான நிலைமையி லிருக்கின்றன.

சணல்மில் தொழில் மிகத்திறமான முறையில் அமைக்கப்பட்டிருப்பது உண்மையே. பெரும் பான்மையான மில்களின் நிர்வாகம் இன்னும் ஐரோப்பிய முதலாளிகள் கையிலிருப்பினும், நேர் பாதிப் பங்குகளுக்கு மேலாக இந்தியர் வசமிருக் கின்றன. இயந்திரங்களெல்லாம் பம்பாய்ப் பருத்தி மில்கள் போலில்லாமல் மிகப் புது முறையில் அமைந் திருக்கின்றன. மில்களும் மிகப் பெரியவைகளா யிருக்கின்றன. இலாபமும் தகுந்தபடியாக வரு கிறது. இப்பொழுது வந்துள்ள யுத்தமும் உதவி அளிக்கும். ஆயினும் மேலே எடுத்துக்கூறிய இடை யூறுகள் சிலவற்றைச் சிந்திக்கும்போது சணல் மில் தொழிலின் வருங்கால வாழ்வைப்பற்றிக் கவலை கொள்ளவேண்டிய காலம் வந்துவிட்டதென்பதற்கு ஐயமில்லை.

---

## 4. உரோம நெசவுத்தொழில்.

இது இந்தியாவின் ஒரு புராதனத் தொழில் என்பதற்குச் சந்தேகமில்லை. சிலப்பதிகார உரை யில் எலி மயிராற் செய்த போர்வைகளிருந்ததாகக்

கூறப்பட்டிருக்கிறது. இருக்குவேதம், மகாபாரதம் போன்ற பழைய வடநூல்களிலும் உரோமப் போர்வைகளின் பெயர் குறிப்பிட்டிருக்கின்றது. ஆயினும் இந்தியாவின் வெப்பத்துக்கு உரோம உடைகள் இன்றியமையாதன அல்ல. எனவே பருத்தித்தொழில், சணல் தொழில் முதலியன எய்தியுள்ள விரிந்த நிலையை உரோம நெசவுத்தொழில் எய்தவில்லை.

உரோம ஆடைகள் கைத்தறியிலும் மில்களிலும் நெய்யப்படுகின்றன. அவை விரிப்புக்கம்பளங்கள், சால்வைகள், போர்வைகள் என மூவகைப்படும். கம்பளத்தொழில் பாரசீக நாட்டிலிருந்து இந்தியாவுக்கு வந்ததாகக் கருதப்படுகிறது. மூகலாய மன்னர் காலத்தில் ஆக்ரா, ஜான்பூர் போன்ற இடங்களில் கம்பளத்தொழில் ஓங்கி வளர்ந்தது. மூகலாய ஆட்சி சாய்ந்ததும் கம்பளத் தொழிலும் சோர்ந்தது. 1851-லே லண்டன்மா நகரில் நடந்த பெரிய பொருட்காட்சியில் இந்தியக் கம்பளங்கள் தனி இடம் பெற்றன. அதன் பிறகு இந்தியக் கம்பளங்களுக்கு மேலைநாடுகளில் தேவை பிறந்தது. முஸ்லிம்கள் மட்டும் முதலில் நடத்தி வந்த இந்தத் தொழிலில் இந்துக்களும் முற்படலானார்கள். ஆனால் அழகும் வேலைப்பாடும் அமைந்த கம்பளங்கள் உற்பத்திசெய்வது குறைந்துவிட்டது. சரசமான சரக்குகளுக்கே தேவை ஏற்பட்டதால் சரக்கின் நயமும் குறைந்தது.

அதே காலத்தில் சிறைச்சாலைகளில் கைதிகளைக் கொண்டு கம்பளம் நெய்யும் முறை கையாளப் பட்டது. இது 1868-ல் ஆக்ரா மத்திய சிறைச் சாலையில்தான் ஆரம்பமாயிற்று. கைதிகள் கூலி இல்லாமல் வேலை செய்ததால் வெளியில் நடந்து வந்த தொழிலைச் சிறைச்சாலைத் தொழில் பாதித் தது. இந்த மாறுதல்களால் சரக்கின் நயம் குறைந்ததுமட்டுமன்றிச் சாயத்தின் தன்மையும் மாறியது. இயற்கைச் சாயங்களுக்குப் பதிலாக விலைகுறைந்த செயற்கைச் சாயங்கள் ஏற்றப்பட் டன. வேலைப்பாடுகளும் மேலை நாட்டு விருப்பத்திற் கிணங்க மாறுபட்டன. உள்நாட்டுத் தேவை மிகச் சுருங்கிவிட்டது. தென்னாட்டுத் தொழில் அடியோடு ஒழிந்தது. இன்று கைத்தறிகளில் ஆக்கப்படும் உரோம விரிப்புக் கம்பளங்களில் நூற்றுக்குத் தொண்ணூறு பாகம் ஏற்றுமதிக்காகவே உற்பத்தி செய்யப்படுகிறது,

கம்பளங்கள் போலவே செல்வர் போற்றிய மற்றொரு உரோமச் சரக்கு சால்வை. காஷ்மீரம்தான் சால்வைகளுக்குத் தாயகம். அக்பர் சக்கரவர்த்தி காலத்திற் பிற நகரங்களிலும் சால்வை உற்பத்தி செய்ய முயற்சி நடந்தது. ஆயினும் காஷ்மீரத்தை வெல்ல முடியவில்லை. காஷ்மீரத்தில் ஒருவகை ஆடு களிருக்கின்றன. அவற்றின், உரோமம் ஒப்பற்றது. 1830-ல் அந்நாட்டில் ஒரு பஞ்சம் வந்தது. காஷ் மீர நெசவாளர்கள் பஞ்சாபுக்குப் பிழைக்கச்

சென்றனர். பாஞ்சால ரஜ்ஞித சிங்கர் அவர்களுக்குப் பல வசதிகள் செய்து கொடுத்தார். அது முதல் பஞ்சாப்பில் சால்வை செய்யும் தொழில் தழைக்கத் தொடங்கியது. ஆயினும் இந்திய முடி மன்னர்களின் வீழ்ச்சியும், மற்றவர்கள் கொண்ட புது நாகரீக மோகமும் தொழில் விரைவில் முன்னேறுவதற்குத் தடையாக இருந்தன.

நல்லவேளையாக மேலைநாட்டிலிருந்து காஷ்மீரச் சால்வைகளுக்குத் தேவை வந்தது. எகிப்திலிருந்து கொண்டுவந்த ஒரு காஷ்மீரச் சால்வையை சக்ரவர்த்தினியான ஜோசபைனுக்கு நெப்போலியன் வெகுமதியாக அளித்தானும். அது முதல் காஷ்மீரச் சால்வைகள் மீது மேலைநாட்டில் மோகம் பிறந்தது. பிரஞ்சு முதலாளிகள் இந்தியாவுக்கு வந்து நெசவாளர்க்கு முன்பணம் கொடுத்துத் தொழிலை நடத்தலானுர்கள். பின்னர் சரசமான செயற்கைச்சாயங்களைக் கையாளத்தொடங்கினுர்கள். இங்ஙனம் கம்பளத் தொழிலுக்கு ஏற்பட்ட நிலைமை போலவே சால்வைக்கும் ஏற்பட்டது. இழைநயமும் வேலைப்பாட்டின் உயர்வும் மறைந்தன. அதனேடு ஏற்றுமதி வர்த்தகமின்றிச் சால்வைத் தொழிலுக்குப்புகலில்லை என்னும்நிலை வந்துவிட்டது. 1870-71-ல் பிரான்சுக்கும் ஜெர்மனிக்கும் யுத்தம் ஏற்பட்டவுடன் ஏற்றுமதி சிறிது தடைப்படவே, சால்வைத் தொழில் தத்தளித்து விட்டது. பின்னர் காஷ்மீரச் சால்வைக்கு இருந்த மேலைநாட்டுப்

பிரேமையும் போய்விட்டது. நாட்டுத் தொழில் அதோடு அழிந்துபட்டது. ஜெர்மனியிலும் இங்கிலாந்திலுமிருந்து மில்களில் நெய்யப்பட்ட சால்வைகள் இங்கு இறக்குமதியாயின. சென்ற யுத்த காலத்தில் இறக்குமதி குறைந்தவுடன் நாட்டுத் தொழில் மீண்டும் தலையெடுக்கும்போலிருந்தது. ஆனால் கதர் சால்வைகள் வந்ததும், இறக்குமதி புது வேகம் பெற்றதும் இந்தியக் கைத்தொழிலுக்கு நீங்காத இடையூறுகளாகிவிட்டன.

விரிப்புக் கம்பளங்கள் சால்வைகள் ஆகிய இரு தொழில்களைப்போல இடைக்காலத்தில் வந்ததன்று **போர்வைத்** தொழில். நாட்டின் பல பாகங்களிலுமுள்ள ஏழைக் குடியானவர்கள் நெடுங்காலமாகக் கம்பளிகளை உபயோகித்து வந்துள்ளார்கள். நாட்டின் வெவ்வேறு பாகங்களிலும் குடிசைத்தொழிலாகக் கம்பளிநெசவு நடந்து வந்துள்ளது; இன்னும் ஆங்காங்கே அழியாமல் நடந்து வருகிறது. ஆயினும் அத்தொழில் அரசாங்க ஆதரவு பெறவில்லை. தகுந்த முறையில் மாகாணக் கைத்தொழில் இலாகாக்கள் அதன்மீது கவனம் செலுத்துமாயின், பெருவாரியான மக்கள் பிழைப்பிற்குரிய ஒரு முக்கியக் குடிசைத் தொழில் மீண்டும் உயிர்பெற்றோங்கும்.

உரோமக் கைநெசவுத் தொழில்கள் இங்ஙனமாக, மில்தொழிலின் நிலைமையை ஆராய்வோம். உரோம நெசவுமில் முதன்முதலில்

1876-ல் கான்பூரில் தொடங்கிற்று. கான்பூரை அடுத்த பிரதேசங்களில் ஆட்டு ரோமம் ஏராளமாகக் கிடைக்கிறது. அதோடு குளிர் சற்று மிகுந்த வட நாட்டில்தான் உரோமச் சரக்குகளுக்கு அவசியமு முண்டு. 1882-ல் தாரிவாலில் மற்றொரு மில் நிறுவப் பட்டது. 1886-ல் பங்களூரிலும், 1888-ல் பம்பாயி லும் மில்கள் ஸ்தாபிக்கப்பட்டன. 1914-ல் மொத் தம் இந்தியாவில் ஆறு உரோம நெசவு மில்களே இருந்தன. அவற்றில் சுமார் 40,000 தொழிலாளர் வேலை செய்து வந்தனர்.

சென்ற யுத்த காலத்தில் வெளி நாட்டில் ஏற் பட்ட பிரியத்தால் தொழில் சற்றுப் பெருகலாயிற்று. 1931-ல் சுமார் 18 மில்கள் வேலை செய்யலாயின. ஆனால் இவை உற்பத்தி செய்யும் சரக்குகள் உயர்ந்த தரத்தனவல்ல. செத்த ஆடுகளின் உரோ மம் மிகுதியாகப் பயன்படுத்தப்படுகிறது. நெசவுத் தொழிலுக்கென்று உயர்ந்தவகைக் கம்பளி ஆடு களை வளர்க்கும் பழக்கமில்லை. எனவே போர்வை கள், கம்பளிகள் போன்றவற்றைத் தவிர்த்து மற் றவை மிகக் குறைவாகவே உற்பத்தி செய்யப் படு கின்றன. இதனால் கம்பளி செய்யும் கைநெசவுத் தொழிலுக்குத்தான் ஊனம் நேர்ந்துள்ளது. சமீப காலத்தில், காப்பு வரிகளை இறக்குமதிகளின் மேற் போட்டு இந்தியத் தொழிலுக்குச் சலுகை காட்ட வேண்டுமென்று உரோம மில் தொழிலாளர் வேண் டினர். வேண்டுகோளை விசாரணை செய்த வரிக்

குழுவினர் (டாரிப் போர்டு) இந்திய உரோமத் தொழில் காப்புவரி பெறத் தகுதியற்றதெனத் தீர்மானித்து விட்டனர்.

---

## 5. பட்டு

பட்டு நெசவு இந்தியாவின் மிகப் பழைய தொழிலென்பதற்கு ஐயமில்லை. "பட்டினும் மயிரினும் பருத்தி நூலினும், கட்டு நுண்வினைக் காருகர் இருக்கை" என்பது சிலப்பதிகாரம். ஆனால் போர்த்துகீசியர் இந்தியாவுக்கு வந்து வாணிபம் தொடங்கிய பிறகுதான், இந்தியப் பட்டு ஐரோப்பாவில் அதிகமாகப் பரவலாயிற்று. அதை யறிந்த ஐரோப்பிய வியாபாரக் கம்பெனிகள் இங்கு வந்து பல பட்டு நெசவாளர்களை வேலைக் கமர்த்தி, அவர்களுக்கு முன் பணம் கொடுத்துத் தொழிலை நடத்தினார்கள். இதனால் தொழில் சிறப் படைந்ததேனும், தொழிலாளர் சுதந்திரம் போய் விட்டது. பத்தொன்பதாம் நூற்றாண்டில் கிழக்கிந்திய வர்த்தகக் கம்பெனியார் இங்கிலாந்துக்கு அனுப்பிய ஏற்றுமதிகளில் பட்டு ஒரு தனியிடம் பெற்றிருந்தது. இதனால் இங்கிலாந்திலுள்ள பட்டு நெசவுத் தொழிலாளர் பாதிக்கப்படவே, இந்தியப் பட்டு நெசவுச் சரக்குகளை இறக்குமதி செய்யலாகாதென்ற கிளர்ச்சி பிறந்தது. அதன் பயனாக கம்பெனியார்

மூலப்பொருளான பட்டு நூலையே இறக்குமதி செய்ய லானார்கள். பிறகு இந்தியப் பட்டு நெசவுத்தொழில் ஓங்கவே இல்லை.

ஆயினும் வங்காளம், கூர்ச்சரம், மைசூர், மதுரை, தஞ்சாவூர் முதலிய இடங்களில் உள் நாட்டுத் தேவைக்கு வேண்டிய உற்பத்தி நடந்து கொண்டே வந்தது. இதிலும் காலப்போக்கில் சோர்வு ஏற்பட்டது. உள் நாட்டுப் பிரபுக்களும், தனவந்தரும் நாளடைவில் நலிவடைந்தனர். சீனு, ஜப்பான் போன்ற வேற்று நாட்டுத் தொழிலின் போட்டியும் புகுந்தது.

அழிந்துவரும் பட்டுக் கைநெசவுத் தொழிலின் இடத்தை நிரப்பப் பட்டுமில் நெசவுத் தொழில் தோன்றவில்லை. இந்தியா முழுவதும் மொத்தம் 12 பட்டு நெசவு மில்கள்தான் இன்று இருக் கின்றன. நாட்டில் உற்பத்தியாகும் பட்டுநூல் ஏராளம்; எனினும் பட்டு நெசவு மில்கள் பெருவாரியாகத் தோன்றாமைக்குப் பற்பல காரணங்கள் உண்டு. வெளிநாட்டு ஏற்றுமதியில் சிறப் படைதற்குரிய இழை நயம் இந்தியப் பட்டுநூலுக் கில்லை. உள் நாட்டிலோ, பட்டுக்கிருக்கும் தேவை சொற்பமே. பெருவாரியான மக்கள் ஏழைகள். பட்டுக்கும் அவர்களுக்கும் எட்டாத்தொலை. அன்றி யும், மாகாணங்கள் தோறும் பட்டுடையில் பெரிய வேற்றுமைகளிருக்கின்றன. தனித்தனி விருப்பங் களைப் பூர்த்தி செய்யக் கைத்தறிகளே ஏற்ற கருவி.

ஜரிகையில்லாத பட்டாடை அதிகமாக விரும்பப் படுவதில்லை. இயந்திரங்களில் ஜரிகை போடுவது இயலாது. பட்டு நெசவுக்கு மிக நுட்பமான இயந் திரங்களும், கைதேர்ந்த இயந்திரத் தொழிலாளரும் வேண்டும். இவை நாட்டில் கிடைத்தல் அருமை. அரசாங்க ஆதரவும் குறைவு. இவைகள் சீர்படும் போதுதான் பட்டுத் தொழில் தலையெடுக்கக்கூடும்.

தக்க ஆதரவு பெறாவிட்டால் நாட்டுப் பட்டுத் தொழில் விரைவில் அழிந்துவிடுமென்று பட்டு மில் முதலாளிகளும் பிறரும் அரசாங்கத்தாரிடம் விண் ணப்பித்தனர். அதன் பயனாக டாரிப் போர்டு ஒன்று நியமனமாகி விசாரணை நடந்தது. அவர்கள் அறிக்கை வரும் வரையிலும் தற்காலிகமாக ஒரு சிறு அளவுக்கு வரிப் பாதுகாப்பு அளிக்கப்பட்டது. சமீபத்தில் போர்டாரின் அறிக்கையும் வெளிவந் துள்ளது. காப்புவரிக்குச் சாதகமாக அவர்கள் சிபார்சை செய்துள்ளார்கள். ஆனால் யுத்தத்தினால் இயல்பாகப் பட்டின் விலை ஏறியிருப்பதே தகுந்த காப்பாயிருக்கிறதென்றும், தற்காலிகமாகப் போடப் பட்ட வரி மட்டும் நீடிக்கலாமென்றும், பின்னர் பார்த்துக் கொள்ளலாமென்றும், அரசாங்கத்தார் முடிவு செய்துவிட்டனர்.

---

## 6. தோட்டத் தொழில்கள்

ஆலைத்தொழிலைப் போலவே தோட்டத்தொழி லும் பெருந்தொழில்களுள் ஒன்றாகும். அதனை விவசாயத்தோடு சேர்த்து எண்ணலாகாது. உரிமை யின்றிக் கூலிக்காக வேலை செய்வோர் பலராக வும், நிர்வகிப்போர் சிலராகவுமிருக்கும் ஆலை முறைமை தோட்டத்தொழிலிலும் உண்டு. இந்தியா வில் முதலில் ஏற்பட்ட பெருந்தொழில் தோட்டத் தொழிலே யாகும். அது ஆங்கிலேயரால் பதி னெட்டாம் நூற்றாண்டில் தொடங்கப்பட்டது. அப் பொழுது ஏற்பட்ட தொழில் அவுரித்தொழிலாகும். வங்காளத்தில் முதலில் தோன்றிய அவுரித்தொழில் 1850-க்குள் சிறந்த வளர்ச்சியுற்றது. ஆயினும் அவுரித்தொழிலாளர் ஐரோப்பிய முதலாளிகளால் அடிமைக்கு நிகராகவே கருதப்பட்டனர். அவுரி விவசாயிகளுக்குத் தாமாகவே கடன் அளித்து அவர்களைக் கடன் வலையாற் பிணித்து வருத்தி வந்தனர். பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதி வரையிலும் செழிப்புற்றிருந்த அவுரித்தொழில் ஜெர்மன் செயற்கைச் சாயத்தால் அழியலாயிற்று. போர் தொடங்கியபோது அது மீண்டும் தலை யெடுத்தது. ஆனால் போர் முற்றுப்பெற்றதும் அவுரித்தொழில் மிகக் குறைந்தது. வீழ்ந்த அவுரித் தொழிலைச் செயற்கைச் சாயத்தோடு போட்டியிடத் தக்க உயர்ந்த நிலையிற் கொண்டுவர அண்மையில் ஆராய்ச்சிகள் நடைபெற்று வருகின்றன.

## தேயிலை

தோட்டத் தொழிலின் முன்னணியில் நிற்பது தேயிலைத் தொழிலாகும். ஆங்கிலேய முதலாளி களால் 1834-ஆம் ஆண்டு இத்தொழில் இந்தியாவில் ஆரம்பிக்கப்பட்டது. ஆசாம், வங்காளம், நீலகிரி முதலிய இடங்களில் தேயிலைத் தொழில் வளர்ந் தோங்குகிறது. 1856 முதல் மூன்றாண்டுகளில் தேயிலை நிறைந்த ஊதியத்தை உதவியதால் அத் தொழிலின்மீது மோகம் மிகுந்தது. அரசாங்கமும் வேண்டிய ஆதரவளித்தது. தக்கார், தகவிலர் என்ப தனைக் கருதாமலும், காட்டுமாந்தரின் உரிமையைக் கவனியாமலும் நிலப்பகுதிகள் பதிவுசெய்து வழங்கப் பட்டன. வரையறையின்றி ஐரோப்பியர்க்கெல்லாம் காட்டு நிலங்கள் வழங்கப்பட்டமையால் 1866-ம் ஆண்டு நீர்க் குமிழிபோல் எழுந்த இத்தொழில் அழிந்து போயிற்று. அக்காலத்திற் தோட்டத் தொழிலாளர் அடைந்த நிலை சொல்லும் தகையத ன்று. இருபதாம் நூற்றாண்டில் ஏற்பட்ட சட்டங் களின் பின்னர்தான் இவர்கள் நிலை சிறிது செம்மை புற்றது. மீண்டும் 1871-ம் ஆண்டில் தொழில் உறுதி பெற்றது. பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதி வரையிலும் வளர்ந்தோங்கி வந்த தொழில் விலைக் குறைவால் சிறிது வீழ்ச்சியுற்றது. ஆயினும் இருப தாம் நூற்றாண்டில் ஏற்பட்ட இந்தியத் தேயிலைச் சங்கத்தின் முயற்சியால் புதிதாகப் பல வெளிநாடு களுக்கு இந்தியத் தேயிலை ஏற்றுமதியாயிற்று.

அன்றியும் இந்திய மக்களிடையே தேனீர் பருகும் வழக்கம் மிகுந்தது. ஆதலால் தளர்ந்த தொழில் மீண்டும் தலையெடுத்தது. போர்க் காலத்தில் ரஷ்ய மக்கள் இந்தியத் தேயிலையை வாங்காவிடினும் ஆங்கிலேயர் வாங்கிவந்ததால் தேயிலைத் தொழில் வளர்ச்சி குறைவுபடவில்லை. ஆனல் 1930-ம் ஆண்டில் ஏற்பட்ட பொருளாதார நெருக்கடியால் அது மீண்டும் சோர்வடைந்தது. ஆதலின் இந்திய அரசாங்கத்தார் 1933-ம் ஆண்டு தேயிலை உற்பத்தியாகும் இலங்கை, சாவா ஆகிய நாடுகளுடன் ஒப்பந்தம் ஒன்று செய்து உற்பத்தியை மட்டுப் படுத்தினர். வெளிநாட்டின் ஏற்றுமதியும் இலங்கைத் தேயிலையின் போட்டியும் இந்தியத் தேயிலைத் தொழிலுக்கு ஏற்பட்ட இடையூறுகளாம்.

### காப்பி.

ஆதியில் காப்பி அரேபிய வர்த்தகரால் இந்தியாவிற்குக் கொண்டுவரப்பட்டது. ஆயினும் ஆங்கில ஆட்சியின் பின்னரே அது வளர்ச்சியடையத் தொடங்கிற்று. மைசூர், குடகு முதலிய மலை நாட்டுப் பகுதிகளில் வளர்ந்தோங்கி வந்த இத் தோட்டத் தொழில் ஆயிரத்து எண்ணூற்று எண்பதாம் ஆண்டு வரையிலும் சிறந்து நின்றது. ஆனல் அக்காலத்தில் பயிரை அழிக்கும் கொடிய பூச்சி நோயொன்று பரவியது. அதனோடு பிரேசில் தேயத்துக் காப்பியின் போட்டியும் வந்தது. காப்பித் தோட்டங்களிற் பல தேயிலை, ரப்பர்த்

தோட்டங்களாக மாறின. யுத்தகாலத்தில் காப்பித் தொழில் சற்று தலையெடுத்தது. ஆனால் இந்த வாழ்வு நீண்டு நிற்கவில்லை. பின்வந்த பொருளாதார நெருக்கடி காப்பித் தொழிலையும் பற்றிக் கொண்டது. காப்பி விளைவினால் வரும் ஊதியம் போதிய அளவு இல்லாமையால் இத்தொழிலின் எதிர்கால வாழ்வு இன்னதென்று இப்பொழுது கூறுதற்கில்லை.

---

## அடிப்பெருந் தொழில்கள்

### நிலக்கரி

தொழில் வளர்ச்சிக்கு நிலக்கரி ஒரு மூலாதாரப் பொருள், நிலக்கரி அடையல்களைக் கண்டு பிடித்து அகழ்ந்த பின்னரே இந்தியத்தொழில்கள் விரைவில் பெருகத்தொடங்கின. 1854-ல் போட்ட கிழக்கிந்திய ரயிலுக்கு நிலக்கரி தேவையாயிற்று. இறக்குமதியான நிலக்கரி அதிக விலையாயிருந்தது. எனவே உள்நாட்டில் நிலக்கரி அடையல்களிருக்கின்றனவா எனத் துருவலாயினர். ராணிக்கஞ்சிலுள்ள சுரங்கங்களைக் கண்டுபிடித்து வேலை செய்யலாயினர். அதன் பின்னர் வங்காளத்திலும், மத்திய மாகாணத்திலும் பல இடங்களில் நிலக்கரி அடையல்கள் வெட்டி எடுக்கப்பட்டன. பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில், இறக்குமதியான நிலக்கரியைவிட உள்நாட்டு உற்பத்தி

அதிகமாயிற்று. சென்ற யுத்தகாலம் வரையிலும் இந்த உற்பத்தி பெருகிக்கொண்டே வந்தது. யுத்த காலத்தில் சீமையிலிருந்து நிலக்கரி வராமையாலும், இந்தியாவில் ஏற்பட்ட தொழில் வளர்ச்சியாலும் நிலக்கரிக்குப் பெருத்த தேவை ஏற்பட்டது. அப் பொழுது வங்காளத்திலுள்ள சுரங்கங்கள் அதி தீவிரமாக வேலை செய்யலாயின. ஏற்றுமதியை அரசாங்கத்தார் கட்டுப்படுத்த வேண்டிய நிலைமை உண்டாயிற்று. யுத்த நெருக்கடி நின்றதும் ஏற்று மதியின் மீதிருந்த தடை எடுக்கப்பட்டது. ஆனால், அதற்குள், வங்காள நிலக்கரி முன் ஏற்றுக் கொண் டிருந்த நாடுகளில் இங்கிலாந்து, ஆபிரிக்கா ஆகிய தேசங்களிலுள்ள நிலக்கரி நுழைந்துவிட்டது. அன்றியும் உள்நாட்டு நிலக்கரியினும் இறக்குமதி யான கரி நயமுடையதா யிருந்தது. ஆதலால் நாட்டு நிலக்கரித் தொழில் சோர்வடைந்தது. ஆபிரிக்காக் கரியின் மீது காப்பு வரி விதிக்க வேண்டுமென்று சுரங்க முதலாளிகள் முறை யிட்டனர். டாரிப்போர்டு இதைப்பற்றி விசாரணை செய்தல் வேண்டுமென்றும் தீர்மானம் சட்ட சபை யிலும் நிறைவேறியது. ஆனல் தொழிலின் குறைகள் அடிப்படையானவை எனக்கருதி அரசாங்கம், நிலக்கரிக் குழுவொன்றை நியமித்தது. 1925-ல் அக் குழுவின் அறிக்கை வெளிவந்தது. ஏற்றுமதியாகும் வங்காள நிலக்கரிக்கு, ரயிற் சத்தம், கப்பற் சத்தம் ஆகியவைகளில் சலுகை ஏற்பட வேண்டுமென்றும்,

நிலக்கரியைத் தரம் வகுக்கப் போர்டு ஒன்று ஏற்படுத்த வேண்டுமென்றும் நிலக்கரிக் குழுவினர் சிபார்சு செய்தனர். அரசாங்கமும் அதற்கு இசைந்து சட்டம் வகுத்தது.

ஆயினும், நிலக்கரி உற்பத்தி முறையில் இருக்கும் அடிப்படையான குறைகள் நீங்கவில்லை. அவை நீங்கினுலொழிய தொழில் முதல்தரமான நிலையை அடைய முடியாது. தகுந்த புது இயந்திரங்களை உபயோகிக்கவேண்டும். தொழிலாளரும் திறனுடையவர்களாக இருக்கவேண்டும். தற்போது நிலக்கரித் தொழிலாளர்கள் விவசாயிகளாகவும் இருக்கின்றார்கள். அறுவடைக் காலங்களில் நாட்டுப் புறங்களுக்குப் போய்விடுகிறார்கள். இதனல் உற்பத்தி ஒரே யளவாக நடைபெறத் தடையாகிறது. இவ்விரு குறைபாடுகளையும் நீக்குவதற்கு முயற்சிகள் நடைபெற்று வருகின்றன. நாட்டின் நிலக்கரி முழுதும் குறித்த ஒரு பகுதியில் இருப்பது மற்றொரு குறையாகும். சணல் மில்களுக்கு ஏற்பட்ட தளர்வு நிலக்கரித் தொழிலையும் பாதித்துவிட்டது.

இந் நாட்டில் மின்சார சக்தி உற்பத்தியாகும் இடங்கள் வேறு. ஆதலால் மின்சார சக்திக்கும், நிலக்கரிக்கும் போட்டியில்லை, மின்சார சக்தி இல்லாத பாகங்களுக்கு நிலக்கரி உதவினுற் போதுமானது. அங்ஙனம் உதவுவதால் நிலக்கரி அடையல்களும் நெடுங்காலம் இருந்து வரும். தகுந்த இயந்திரங்களின் உதவியால் உற்பத்தி முறையைச்

சீர்திருத்தல் வேண்டும். அங்ஙனம் செய்யின், ஏற்றுமதியையும் எண்ணுது உள்நாட்டிற்கு வேண்டிய உயர்ந்த நிலக்கரியை உதவ முடியும். தற்பொழுது நம் நாட்டில் ஆண்டொன்றிற்கு இரண்டு கோடி டன் நிலக்கரி உற்பத்தி செய்யப்படுகிறது. விரைவில் அடையலிலுள்ள நிலக்கரி தீர்ந்துவிடுமென அஞ்ச இடமுண்டு. மின்சார சக்தி எவ்வளவு உதவக்கூடும் என்பது பற்றியும், இருக்கும் நிலக்கரி நீடித்திருக்கும் காலவரையறையைப் பற்றியும் ஆராய்ந்து காண ஒரு நிபுணர் குழுவை அரசாங்கம் விரைவில் நிறுவுதல் வேண்டும்.

### இரும்பும் எஃகும்

இரும்பும் எஃகும் இன்றைய நாகரீகத் தேரின் அச்சாணிகள். இயந்திர வாழ்க்கை தோன்றுவதற்கு முன்பு படைக்கலன் போன்ற கருவிகள் செய்வதற்கே இரும்பு பெரும்பாலும் பயன்பட்டு வந்தது. அந்த வகையில் இந்திய இரும்பு எதற்கும் பிற்பட்டதன்று. மேலைநாடுகளில் டாமஸ்கஸ் இரும்பு என்று பண்டை நாளில் புகழ்பெற்று நிலவிய உலோகம் உண்மையில் ஐதராபாதிலிருந்து ஏற்றுமதியானதாகும். எஃகுத்தொழில் பத்தொன்பதாம் நூற்றுண்டின் தொடக்கத்திலும் தென்னுட்டில் பல இடங்களில் செழிப்பாக நடந்து வந்ததென்பது டாக்டர் புக்கானன் என்பவர் நேரிற்கண்டு எழுதின குறிப்புகளிலிருந்து வெளியாகின்றது.

இந்தியாவில் இரும்பும் எஃகும் உற்பத்தி செய்ய இயற்கை வசதிகள் ஏராளமாக இருக்கின்றன. இரும்புக்கனிகள் தரைமட்டத்தை அடுத்தும் உயர்ந்தும் இருக்கின்றன. ஆழ்ந்து அகழ்ந்து வருந்தி எடுக்கவேண்டியதில்லை. கனிகள் மிகவும் வளமானவை. நூற்றுக்கு எழுபதுக்குமேல் இரும்பு மயமிருக்கிறது; கழிவு அதிகமில்லை. கனிகள் ஏராளமாகவும் இருக்கின்றன. இங்கிலாந்தில் இருக்கும் கனியளவு இந்தியாவிலும் இருக்கின்றதென்றும், 300 வருடங்களுக்குக் கவலையே இல்லையென்றும் உலோக நூல்வல்லார் மதிப்பிடுகின்றனர். இரும்பை எடுக்கவும்; அதனை எஃகாக மாற்றவும் இன்றியமையாத நிலக்கரிபோன்ற பொருள்களும் ஓரளவுக்கு அண்மையிலேயே இருக்கின்றன. ஆனல் இந்த நிலக்கரி மிக மட்டமான சரக்காயிருப்பது சற்று முட்டுக்கட்டையாக இருக்கிறது. இவற்றோடு இந்திய இரும்புக்கு உள் நாட்டிலும் வெளி நாட்டிலும் அமோகமான தேவையும் இருக்கிறது. மேலும் ஒரு முக்கியமான குறையும் உண்டு. தொழிலைத் திறம்பட நடத்துவதற்குரிய நிபுணர்கள் வெளி நாடுகளிலிருந்து வரவேண்டிய நிலைமையிலிருக்கிறது. இவர்களுக்குப் பெருத்த சம்பளம் கொடுத்தல் வேண்டும். வெப்பம் மிகுந்த இந்திய நாட்டுக்கு வந்ததும் அவர்கள் வேலைத்திறனும் சோர்வு படுகிறது. இதைக் கருதி இந்தியர்கள் நிபுணர்களாகும்படி பயிற்றப்பட்டு வருகின்றார்கள். எனினும்

மேல் நாட்டு நிபுணர் உதவி அறவே இல்லாமலாவ தற்கு இன்னும் வெகு காலம் பிடிக்கும்.

இத்தனை வசதிகள் இருந்தும் இரும்புத்தொழி லும் எஃகுத்தொழிலும் நாட்டில் விருத்தியடைய வெகுகாலம் பிடித்தது. கம்பெனியார் காலத்தி லிருந்தே அத்தொழில்களைத் தொடங்கப் பல முயற்சி கள் செய்யப்பட்டன. தென்னாட்டில் சேலத்திலும், பரங்கிப்பேட்டையிலும் இரும்புத்தொழில் ஸ்தாபிக் கப்பட்டது. ஆயினும் போதிய ஆதரவின்மையினா லும், அனுபவக்குறைவினாலும், பொருள் வறட்சி யாலும் அவைகள் உருப்படவில்லை. 1889-ல் 'வங்காள இரும்பு எஃகுக் கம்பெனி' நிறுவப்பட்டது. பின்னர் 1907-ல் டாட்டா கம்பெனி தோன்றியது. 'இந்தியன் இரும்பு எஃகுக் கம்பெனி'யும் 'மைசூர் இரும்புக் கம்பெனி'யும் மற்றிரு கம்பெனிகளும் தோன்றின. இவை நான்கும் இன்று இரும்புப் பாளங்கள் (Pig Iron) உற்பத்தி செய்கின்றன. மொத்தத்தில் டாட்டா மட்டுமே நூற்றுக்கு எழுபது வீதம் உற்பத்தி செய்கிறது. எஃகு உற் பத்தி செய்வது டாட்டா ஒன்றே.

டாட்டா கம்பெனியின் தோற்றமும் பெருக்கமும் இந்தியத்தொழில் சரித்திரத்தில் ஒரு அற்புதக் கதை போன்றது. ஜாம்ஷெட்ஜீ டாட்டா ஒரு பார்ஸி தனவந்தர். நாகப்பூரில் பல நெசவு மில்களை நிறுவி விட்டு, இந்திய இரும்புத்தொழிலைத் தொடங்கும்

நன்முயற்சியில் ஈடுபட்டார். தொழிலைத் தொடங்குவதற்குமுன் அதைப்பற்றி விசாரணை செய்ய மட்டும் அவருக்கு ஏற்பட்ட செலவு சுமார் 6 லட்சம். அவரே இந்திய இரும்புத் தொழிலின் தந்தையாவார்.

தொழிலை ஸ்தாபிக்குமுன் 1903-ல் டாட்டா இறந்துவிட்டார். தந்தையின் கனவை உருப்படுத்த அவர் தனயர் முனைந்தார். 1907-ல் சூடிய நாகப் பூருக்கு அருகாமையில் இரண்டு கோடி ரூபாய் முதல் போட்டு டாட்டா இரும்புக் கம்பெனி தொடங் கப்பட்டது. இந்த இடம் பின்னர் காலஞ்சென்ற ஜாம்ஷெட் டாட்டாவின் நினைவுக்குறியாக ஜாம் ஷெட்பூர் என்ற பேரோடு விளங்கலாயிற்று.

1911-ல் இருப்புப் பாளங்கள் உற்பத்தி செய் யப்பட்டன. 1913-ல் எஃகும் உற்பத்தி செய்யப் படுவதாயிற்று. அரசாங்கத்தார் வேண்டிய ஆதர வளித்தனர். யுத்த காலத்தில் டாட்டாவின் இரும்புத் தொழில் ஓங்கியது. 1921-வரையிலும் இந்த நிலைமை இருந்தது. பின்னர் இரும்பின் விலை குறையவே டாட்டா கம்பெனி ஆட்டம் அடைந்தது. அப்பொழுதுதான் இந்தியத் தொழில்களுக்குக் காப்பு வரிகள் மூலம் ஆதரவளிப்பதென்ற தீர்மா னம் அரசாங்கத்தில் பிறந்தது. டாரிப் போர்டாரின் விசாரணைக்குள் வந்த முதல் தொழில் இரும்புத் தொழிலாகும். $33\frac{1}{3}$ சதம் காப்புவரி விதிக்க

வேண்டுமென்று கம்பெனியார் விண்ணப்பித்தனர். 1924-ல் இது வழங்கப்பட்டது. ஆனால் நாணய மாற்று விகிதத்தில் ஏற்பட்ட சில இடர்ப்பாடுகளால் இந்தக் காப்புவரி போதாதாயிற்று. வரிக்குழுவினர் காப்புவரியை இரட்டிக்க வேண்டுமென்றனர். அரசாங்கத்தார் மானியமே வழங்கினர். 1927-ல் மீண்டும் போர்டார் விசாரணை செய்தனர். மானியம் நிறுத்தப்பட்டு, புதுக் காப்பு வரிகள் ஏழு ஆண்டுகளுக்கு வழங்கப்பட்டன. ஒட்டாவா ஒப்பந்தத்தின் போது ஆங்கில நாட்டுக்குச் சலுகை காட்டப்பட்டது. 1934-ல் மீண்டும் டாரிப் போர்டு விசாரணை நடந்தது. 1941-வரையிலும் காப்பு வரிகள் நீடிக்கப்பட்டன.

இந்தியாவின் இரும்புத் தொழிலும் எஃகுத் தொழிலும் பிறைமதிபோல் வளர்ந்துவருகின்றன. இருப்புப் பாளங்களைக்கூட இறக்குமதி செய்துவந்த இந்தியா இப்பொழுது அவற்றை ஏராளமாக அயல் நாடுகளுக்கு ஏற்றுமதி செய்கின்றது. சென்ற சுமார் பத்து ஆண்டுகளுக்குள் உற்பத்தி பலபடப் பெருகியிருக்கின்றது. வருங்கால இந்தியாவில் இரும்பு எஃகுத் தொழில் தழைத்தோங்குமென்பது திண்ணம்.

## சிமிட்டி.

சிமிட்டிக்கு நம் நாட்டில் நாளுக்கு நாள் தேவை விரிந்துகொண்டே போகின்றது. சிமிட்டித்

தொழில் அபிவிருத்தி யாவதற்கு வேண்டிய வசதிகளும் இந்நாட்டிலிருக்கின்றன. சிமிட்டி செய்ய சுண்ணும்புக் கல்லும், களிமண்ணும் முக்கியமாக வேண்டியவை. இவை நாட்டின் பல பாகங்களிலும் ஏராளமாக அகப்படுகின்றன. இந்தத் தொழிலுக்கு வேண்டிய இயந்திரங்களும் அதி நுணுக்கம் வாய்ந்தன வல்ல. ஆதலால் விசேஷ இயந்திர ஞானம் பெற்ற தொழிலாளர்கள் பலர் வேண்டுமென்பது மில்லை.

இத்தனை சௌகரியங்கள் இருந்த போதிலும் ஒரு சில இடர்ப்பாடுகளும் உண்டு. தொழிலைத் தொடங்குவதற்குத் தகுந்தபடியான முன் முதல் வேண்டும். இரண்டாவதாக, தொழில் நடக்கும் இடத்தின் பக்கத்திலேயே நிலக்கரியும் கிடைக்க வேண்டும். கடைசியாக, தொழில் நிலையங்கள் துறைமுகங்களுக்கும் மிகத்தொலைவில் இருத்தலாகாது.

நிலக்கரி நெடுந்தூரத்திலிருந்து வருவதானல், "சுண்டைக்காய் காற்பணம் சுமை கூலி முக்காற் பணம்" என்ற கதையாகி விடுகிறது. அதனல் சிமிட்டியின் உற்பத்திச் செலவு உயர்ந்து விடுகிறது. சமீபத்தில் இயந்திரங்களை இயக்க மின்சாரம் உபயோகிக்கப்பட்டுவருகிறது. நிலக்கரிப் பிரச்னை இனி நின்றுவிடும். துறைமுகங்கள் எட்டி இருப்பதால், உற்பத்தியாகும் சிமிட்டியை ஏற்றுமதி செய்வதற்குள் வண்டிச்சத்தம் ஏறிவிடுகிறது. ஆனல் இது

நன்மையாகவும் முடிகிறது. வெளிநாட்டுச் சிமிட்டி உள்நாட்டில் வந்து சேர்வதற்குள் அது போலவே விலை உயர்ந்து விடுகின்றது. எனவே உள்நாட்டுப் பக்கம் நாட்டுச் சிமிட்டியும் துறைமுகங்களில் வேற்றுச் சிமிட்டியும் வழங்குகின்றன. ஆனல் கல்கத்தா, பம்பாய் போன்ற துறைமுகப்பட்டணங்களில் தான் சிமிட்டி ஏராளமாகச் செலவாகின்றது. அங்குதான் இறக்குமதிச் சரக்கு சிறப்பிடம் பெறுவது.

1914-ல் யுத்தத்தோடு சிமிட்டித் தொழிலும் இந்தியாவில் தொடக்கமாயிற்று. புரபந்தார் என்ற இடத்திலும், கட்னி என்ற இடத்திலும் தொழிற்சாலைகள் நிறுவப்பட்டன. யுத்த காலத்தில் இவை அரசாங்கத்துக்குப் பேருபகாரமாயிருந்தன. அரசாங்கத்தின் மேற்பார்வையிலேயே தொழில் நடந்தது. அதன் பின்னர் வேறு பல இடங்களிலும் சிமிட்டித் தொழிற்சாலைகள் ஸ்தாபிக்கப்பட்டன. யுத்த காலத்தில் வந்த பெருவாழ்வு 1922-ல் தாழ்வடையத் தொடங்கியது. துறைமுகப் பட்டினங்களிலெல்லாம் ஆங்கில நாட்டுச் சிமிட்டி வந்து குறைந்த விலைக்குப் போய்க்கொண்டிருந்தது. உள்நாட்டில் செல்வாக்கோடு இருந்த நாட்டுச் சிமிட்டி, தொழிற்சாலைகள் மிகுதியால் போட்டிக்குட்பட்டு முதலுக்குக் கட்டுபடியாகாத விலைக்கு விற்கவேண்டியதாயிற்று. சீமைச் சிமிட்டியின் போட்டியால் வந்த கேட்டைவிட நாட்டுச் சிமிட்டிப் போட்டியால் வந்த கேடே பெரிதாயிற்று. சீமைச்

சிமிட்டி நெடுங்காலமாக நாட்டில் நிலைத்து நல்ல தென்று பேர்வாங்கி விட்டது. என்னதான் இந்தியச் சரக்கு உயர்ந்தது என்று ஆராய்ச்சி பூர்வமாக நிரூபித்தாலும், எஞ்சினீயர், கட்டிடக் கண்டராக்டர் முதலியோர் நெடுநாளாகக் கொண்டுள்ள ஒரு நல்லெண்ணத்தை எளிதில் மாற்றிக்கொள்ளத் தயாராகவில்லை. இதுவும் தொழில் முன்னேறுத தற்கு ஒரு காரணம். கடைசியாக, வரத்து சிமிட்டி மரப்பீப்பாய்களில், உள்ளே காகிதத்தால் சுற்றப் பட்டு பந்தோபஸ்தாக எடுத்துச் செல்லப்படு கின்றது. நாட்டு சிமிட்டி கோணிப்பைகளில் அடைக்கப்பட்டு விற்பனையாகின்றது. மழை, தண்ணீர் படும்போது அது நனைந்து விரைவில் கெட்டுப் போகின்றது. சீமைச் சிமிட்டியைப்போல் நாட்டுச் சிமிட்டியையும் பீப்பாய்களில் அடைத்து விற்பதானல் டன் ஒன்றுக்கு சுமார் 20 ரூபாய் வரை பிடிக்கும். அப்படியானல் தொழில் தலையெடுப்பதெப்படி ?

இக்காரணங்களால் எழுந்த சோர்வைப் போக்க அரசாங்க ஆதரவு வேண்டுமென்ற கிளர்ச்சி தோன்றியது. 1924-ல் வரிக்குழுவினர் தொழிலின் நிலைமையை நன்கு ஆராய்ந்து, ஓரளவுக்குக் காப்பு வரியாலும், ஓரளவுக்கு மானியத்தாலும் உதவி அளிப்பது சாலும் என்ற முடிவுக்கு வந்தனர். ஆயினும் அந்த அறிக்கைப்படி அரசாங்கத்தார் எதுவும் செய்ய முன் வரவில்லை.

"ஒன்று பட்டால் உண்டு வாழ்வு" என்பதைச் சிமிட்டித் தொழில் நிலையங்களின் தலைவர்கள் 1925-ல் தான் உணர்ந்தார்கள். இந்தியச் சிமிட்டி உற்பத்தியாளர் சங்கம் பிறந்தது. தம்முள் போட்டி போடுவதை அகற்றி எல்லோருக்கும் இலாபகரமாக இருக்கும் ஒரு விலையைத் திட்டப் படுத்தினார்கள். வண்டிச்சத்தங்களைக் குறைத்தார்கள். அனைவருக்கும் பயன்படும்படி விளம்பரங்கள் செய்தார்கள். பொது ரஸ்தாக்களைச் சிமிட்டியால் போடும்படித் தீவிரப்பிரசார வேலை செய்து வருகின்றார்கள்.

---

## 8. மற்றும் சில தொழில்கள்

### தீக்குச்சி.

தீக்குச்சி செய்யும் தொழில் 1914-வது ஆண்டு யுத்தத்துக்குப் பிறகுதான் தோன்றியது. அதற்கு முன் இந்தியாவில் அதைத் தொடங்க எத்தனையோ முயற்சிகள் செய்யப்பட்ட போதிலும் அவை பெரும்பாலும் பயனற்றதாகி விட்டன. அகமதபாதில் 1895-ல் ஆரம்பிக்கப்பட்ட 'குஜராத் இஸ்லாம் தீக்குச்சி தொழிற்சாலை' ஒன்று தான் உயிரோடிருந்தது.

ஆதியில் தொடங்கப்பட்ட தொழிற் சாலைகள் ஒன்றன்பின் ஒன்றாக மறைவதற்கு மூன்று முக்கிய

காரணங்களுண்டு: (1) தொழிற்சாலைகளைச் சரியான இடங்களில் தொடங்கவில்லை. மூலப்பொருள்களை அந்த இடங்களுக்குக் கொண்டு செல்வதற்குள் வண்டிக்கூலி அதிகமாயிற்று. (2) தொழிலைச் சரிவர நடத்துவதற்கு வேண்டிய விசேஷ தொழிலறிவு பெற்றவர்கள் போதிய அளவு கிடைக்கவில்லை. (3) போதிய தொழிலாளர் முன்வரவில்லை.

இவற்றோடு மூலப்பொருள்கள் விஷயத்திலும் குறைபாடு உள்ளது. ஒரு தொழிலுக்கு வேண்டிய மூலப்பொருள்கள் எல்லாம் ஒரு நாட்டில் கிடைக்க மாட்டா. சிலவற்றை இறக்குமதி செய்துகொள்ளத் தான் வேண்டும். இது இந்தியாவுக்கு மட்டுமல்ல; தீக்குச்சித் தொழில் நடக்கும் எல்லாத் தேசங்களும் ஓரளவுக்கு அப்படியே.

இறக்குமதி செய்யவேண்டிய மூலப்பொருள்கள், உற்பத்தியாகும் தீப்பெட்டித் தினுசைப் பொறுத்திருக்கின்றன. குச்சிக்கு மட்டும் அயல் நாட்டு மரங்களை வாங்கிக்கொண்டு பெட்டிக்கு உள்நாட்டு மரங்களை உபயோகித்துக் கொள்வது ஒரு வகை. குச்சிக்கு இந்திய மூலப்பொருளை வைத்துக்கொண்டு பெட்டிக்கு வேற்றுப் பொருளை இறக்குமதி செய்து கொள்வது மற்றொரு வகை. இரண்டுக்கும் வேற்று நாட்டு மரங்களை உபயோகிப்பது மூண்டு. இந்திய மரங்கள் உயர்ந்த வகைக் குச்சிகளும் பெட்டிகளும் செய்யத் தகுந்தனவல்ல என்று நெடு நாளாகக்

கருதப்பட்டு வந்தன. சமீபத்தில் ஆராய்ச்சி செய்து தகுந்த மரங்களை இந்தியாவிலேயே நட்டு வளர்க்க ஏற்பாடுகள் செய்யப்பட்டு வருகின்றன.

சென்ற யுத்த காலத்தில் இறக்குமதியான தீக் குச்சிகளின்மீது வரி விதிக்கப்பட்டது. வருமானத்தைக் கருதிச் சுமத்திய வரிதான் இது. ஆயினும் அது உள்நாட்டுத் தொழிலுக்கு ஓரளவு காப்பளித்தது. அதே காலத்தில் ஜப்பான் சரக்கின் போட்டியும் வலுத்தது. 1921-லும், 1922-லும் இறக்குமதி வரி மேலும் உயர்த்தப்படவே, நாட்டுத் தொழிலுக்குக் காப்பு வலுத்தது. இதன் பயனாக ஜப்பானிலிருந்து குச்சிகளை இறக்குமதி செய்து இங்கு மருந்து தோய்த்துத் தொழில் நடந்தது. தீக்குச்சி இறக்குமதி குறைந்ததேனும், அதற்கு வேண்டும் மரக் குச்சிகளின் இறக்குமதி பெருகியது. அரசாங்க வருமானம் குறைந்தது. குறையவே, மரக்குச்சிகள் மீது வரி போட்டார்கள். அப்பொழுது மரத்தடிகளை இறக்குமதி செய்யத் தொடங்கினார்கள். அந்த மரத்தடிகள் மேலும் அரசாங்கத்தார் வரி விதித்தார்கள். அப்பொழுதுதான் பெட்டிகளுக்கு மட்டும் இந்திய மரங்களை உபயோகிக்கத் தொடங்கினார்கள்.

இவ்வாறு தொழிலுக்குத் தகுந்த ஆதரவு வந்தது. விரைவில் அது பெருகும்போலிருந்தது. இதைக்கண்ட ஸ்வீடனிலுள்ள கம்பெனிகள் ஒரு புது உபாயத்தைக் கையாண்டன. இந்தியாவிலே

வந்து தீக்குச்சித் தொழிற்சாலைகளை ஏற்படுத்தலானார்கள்- இந்தியத் தொழிலுக்கு வந்த ஆதரவெல்லாம் இந்த ஸ்வீடன் கம்பெனிகளுக்கும் வந்தது. ஜப்பானின் போட்டி அடங்கிற்று. 1926-27ல் ஜப்பான் இறக்குமதி அறவே நின்றுவிட்டது. அதற்குப்பிறகு நாட்டுத் தொழிலுக்கும், நாட்டில் தோன்றின ஸ்வீடன் கம்பெனிகளுக்கும் தான் போட்டி. 1927-28ல் தொழிலின் வளர்ச்சியைப் பற்றி ஆலோசனை செய்ய ஒரு தனி டாரிப் போர்டு நிறுவப்பெற்றது. டேராடன் என்ற இடத்தில் தீக்குச்சித் தொழிலைப்பற்றித் தனி ஆராய்ச்சி செய்யவேண்டுமென்று அவர்கள் சிபார்சை செய்தன. இப்பொழுது இறக்குமதியாகும் தீக்குச்சி மிகச் சொற்பமே.

## காகிதம்

ஆதியில் மகம்மதியர் இத்தொழிலை இந்தியாவில் தொடங்கினர் எனக் கருதப்படுகிறது. குடிசைத் தொழில்களுள் ஒன்ருகவே இது எண்ணப்பட்டது. கோணித் துண்டுகளாலும் மரப்பட்டைகளாலும் காகிதம் செய்துவந்தனர். செய்தித் தாள்களும் அச்சுச்சாலைகளும் இல்லாத அக்காலத்தில் இத் தொழில் சிறப்படையவில்லை. ஆயினும் அக்காகிதம் நீண்டகாலம் நிலைப்பதாய் இருந்தது. பின்பு பத்தொன்பதாம் நூற்ருண்டில், மூங்கிலினின்றும் சவை என்னும் புல்லினின்றும் இயந்திரங்கள் மூலமாகக் காகிதம் செய்யப்படலாயிற்று. மூங்கிற்

காகிதத்தினும், சவைப்புல் காகிதம் சிறந்ததாய் இருந்தபோதிலும் போதிய சவைப்புல் கிடைக்கவில்லை. ஆதலின் அக்காலத்தில் உற்பத்திச் செலவு அதிகமாயிருந்தது. யுத்த காலத்தில் இந்திய நாட்டு இயந்திரக்காகிதத் தொழில் முன்னேற்றமடைந்தது. போரின் பின்னர் இறக்குமதியின் பெருக்கால் மீண்டும் அத்தொழில் தளர்ந்தது. அங்கிலேயில் டாரிப் போர்டார் காகிதத் தொழிலுக்கு மானியம் வழங்க வேண்டினர். ஆனால், அரசாங்கம் மூங்கிற் காகித இறக்குமதியின் மீது காப்பு வரி விதித்ததேயன்றி மானியம் வழங்க மறுத்துவிட்டது. மீண்டும் போர் நிகழும் இத்தருணத்தைக் கைவிடாதிருந்தால் காகிதத் தொழில் முன்னேற்ற மடையலாமென எதிர்பார்க்க இடமுண்டு.

## சர்க்கரை.

நாட்டுத் தொழில்கள் காப்புவரியினால் எவ்வளவு பெருவேகத்தில் வளருமென்பதற்குச் சர்க்கரைத் தொழிலின் சரிதமே சான்று. 1931-ல் இந்தியாவில் உற்பத்தியான ஆலைச் சர்க்கரை சுமார் $1\frac{1}{2}$ இலட்சம் டன்கள். இறக்குமதியானது 11 இலட்சம் டன்கள். இப்பொழுது சர்க்கரை இறக்குமதி அறவே நின்றுவிட்டதோடு அயல் நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யும் நிலைமையையும் இந்தியா எய்திவிட்டது. இதைத் தவிர 45 இலட்சம் டன் நாட்டுச் சர்க்கரை வேறு உற்பத்தியாகின்றது.

# குடிசைத் தொழில்கள்

இதுகாறும் கூறியவற்றால் நவீன முறையில் எழுந்துள்ள இயந்திரப் பெருந்தொழில்களே இந்தியாவில் முக்கியமானவை என்று எண்ணக் கூடும். உண்மை அவ்வாறன்று. மொத்தம் ஒரு கோடி 72 இலட்சம் தொழிலாளர் இந்தியாவி லிருக்கின்றனர். இவருள் 20 இலட்சம் தொழிலா ளரே பெருந் தொழில்களில் வேலை செய்கின்றனர். ஏனைய தொழிலாளர் இந்நாட்டில் கிராமந்தோறும் பட்டணந்தோறும் நிலைத்துள்ள குடிசைத் தொழில் களில் வேலை செய்கின்றவராவர்.

இந்தக் கைத்தொழில்கள் தொன்று தொட்டே இந்தியாவில் நிலைபெற்றவை. சிலப்பதிகாரம் போன்ற பண்டை இலக்கியங்களில் இவற்றின் விரிவும் ஆக்கமும் நன்றாய் எடுத்தோதப் பட்டிருக் கின்றன.

இடையறாது பல நூற்றாண்டுகளாக வந்த இந் தியக் குடிசைத் தொழில்கள் சென்ற நூற்றைம்பது ஆண்டுகளில் இயந்திரப் போட்டியின் வேகத்தாலும், ஆங்கிலேயரின் வருகையாலும், இன்னும் பல காரணங்களாலும், எவ்வாறு அழிந்தன என்பது முன்னே பல இடங்களில் குறிக்கப்பட்டது.

ஆயினும் அவை அறவே அழியவில்லை. அழிவு பெறும் நிலைமையும் ஏற்படப்போவதில்லை. ஏழை மக்களுக்குப் பிழைப்பளிக்கும் குடிசைத் தொழில் களை ஈவிரக்கமின்றிக் கொன்றழிக்கும் அரக்கனே இயந்திரம் என்னும் எண்ணம் தவறானது. இயந்திரத் தொழில் கடல்போல் விரிந்துள்ள இங்கிலாந்து, ஜெர்மனி, ஜப்பான் போன்ற தேசங்களில்கூட இன்றும் குடிசைத் தொழில்கள் தனி இடம் பெறு கின்றன. ஜப்பானின் தொழில் வளர்ச்சி அந்த நாட்டுக் குடிசைத் தொழில்கள்மீது கட்டப்பட்ட தென்று சொல்வது மிகையாது. குடிசைகளில் உற்பத்தி செய்யப்பட்ட பல வேறு பாகங்களை ஒன்றிப்பதற்கு மட்டுமே பெரு ஆலைகள் அங்கிருக் கின்றன. இங்கிலாந்திற்கூட குடிசைத் தொழில் களுக்குப் புத்துயிர் அளிக்கும் நோக்கத்தோடு பெரு முயற்சிகள் சமீபத்தில் கையாளப்பட்டுள்ளன என் பதை ஸ்பென்சர்ஹாட்ச் என்பவர் தமது நூலில் குறித்துள்ளார்.

இயந்திரத் தொழில்களை மிகுதியாகவுடைய மேலைநாடுகளே குடிசைத் தொழில்களை உயிராகக் கொண்டிருக்கும்போது இந்தியா அவற்றை எவ் வளவு கண்ணுங்கருத்துமாய்ப் பேணவேண்டும் என் பதை எடுத்துக் கூறவேண்டுமோ? 40 கோடி மக்கள் வாழும் ஒரு நாட்டிலே தொழில்கள் செழித்து எல்லோருக்கும் வேலை உண்டாக வேண்டுமானால் குடிசைத் தொழில்களன்றி வேறு வழி இல்லை

என்பது இந்நூலின் முற்பகுதியிலேயே குறிக்கப் பட்டது. சென்ற முப்பது நாற்பது வருடங்களாக இயந்திரத் தொழில்கள் எவ்வளவோ தலையெடுத்தும் இன்று 20 இலட்சம் மக்கள்தான் அவற்றில் வேலை கண்டுள்ளார்கள் என்றால் இயந்திரத்தொழிலால் பெருவாரியான மக்களின் பொருளாதாரப் பிரச்னை தீர்ந்து விடாது என்பது தெளிவாகின்றது.

இயந்திரப்பெருந் தொழில்களைத் தோற்றுவிக்க ஏராளமான மூலதனம் வேண்டும். அனுபவம், சாஸ்திர அறிவு, தைரியம், சத்தியம் முதலிய குணங்களமைந்த தொழில் தலைவர்கள் வேண்டும். தொழில்கள் தோன்றிய பிறகு தொழிலாளர் முதலாளி பிரச்னை எழுகின்றது. இருப்பிட வசதிகள், சுகாதார வசதிகள் முதலிய பிரச்னைகளும் உறுத்தத் தொடங்குகின்றன. ஒரு சில இடங்களில் பெருந்தொழில்களை யெல்லாம் கொண்டு செறித்து வைத்தால், யுத்தங்கள் நேரிடுங்காலத்து எதிரிகள் அவற்றைக் குண்டுகளால் அழித்து விடுவர். உடனே நாடு முழுதுமே ஆட்டங்கொண்டு விடுகிறது. இன்று லண்டன் நகரத்தின் தொழிற் பக்கங்களை நாசிகள் விரைவில் அழிக்க முயல்வது இதுபற்றி அன்றோ?

இத்தகைய இடர்ப்பாடு யாதும் குடிசைத் தொழில்களிலில்லை. பெரும்பாலான மக்களால்

எளிதில் வாங்கக்கூடிய முறையில்தான் குடிசைத் தொழில்களுக்கு வேண்டிய கருவிகள் அமைந்திருக்கின்றன. உழவுத்தொழில் மலிந்த இந்தியாவிலே நான்கு ஐந்து மாதங்கள் போக எஞ்சிய நாட்களை வறிதே கழிக்கும் மக்கள் வாழ்க்கை வளர வேண்டுமானால் வேறொரு கைத்தொழில் இன்றியமையாததாகும். குடிசைத்தொழில்களிலே தொழிலாளியின் உரிமை தலையெடுத்து நிற்கின்றது. மனைவி மக்களுடன் இருந்து நடத்தும் ஒரு தொழில் முறையிலே இன்பமும் கற்பனைத்திறனும் எழுவனவாகும்.

நாட்டின் சிறு தொழில்கள் மூவகைப்படும். தொன்றுதொட்டே ஊர் தோறும் பழங்குடிமக்களாயுள்ள கொல்லர், வண்ணார், அம்பட்டர், குயவர், வாணியர் போன்ற பணியாளர் நடத்தும் நிலையான தொழில்கள் ஒருவகை. செல்வரும், பிறநாட்டினரும் விரும்பிக்கொள்ளும் அழகுடைய பண்டங்களை உற்பத்தி செய்யும் தொழில்கள் மற்றொரு வகை. இயந்திரங்கள் வந்தும் அவற்றோடு எதிர்த்து நின்று இன்றும் அழியாது நிற்கும் பருத்தி, பட்டு, உரோமம் முதலிய துறையிலுள்ள நெசவுத் தொழில்கள் போன்றன மூன்றும் வகை. இவை ஒவ்வொன்றிலும் எத்தனை தொழிலாளர் வேலை செய்கின்றனர் என்பதற்குச் சரியான புள்ளி விபரங்களில்லை.

இவருள் முதலிற் கூறப்பட்ட பழங்குடிப் பணியாளரே மிகுந்தவர்கள். இவர்கள் கிராம சமுதாயத்தின் கண்போன்றவர்கள். இவர்கள் நிலை இயந்திரம் வந்ததனால் அதிகமாக இழிந்து விட வில்லை. எண்ணெய் வாணியர், குயவர் போன்றவர் இயந்திரத்தின் போட்டியால் ஓரளவு இடருற்றிருப் பினும், பெரும்பாலான கிராமப்பணியாளர் கால முறைக்கேற்ப தமது தொழில் முறையில் சீர்திருத் தங்களைச் செய்துகொண்டு ஒருவாறு பிழைத்து வருகின்றனர். நாட்டு இரும்புத்தொழில் மாய்ந்து வேற்றிரும்பு வந்ததும், அதை வாங்கி உழவர்க்கு வேண்டிய ஏத்தனங்களை முன்போலவே கொல்லர் செய்து வருகின்றனர். அவுரித் தொழில் அழிந்து செயற்கைச் சாயம் வந்ததும் அம்மாறுதலையும் உடனே பின்பற்றி ஒருவாறு விடாது தமது தொழிலை நடத்தி வருகின்றனர் சாயக்காரர். தையல் இயந்திரம் வந்ததும் அதை வாங்கிக்கொண்டு தமது பூர்வத் தொழிலைத் தளராது நடத்துகின்றனர் தையற்காரர். இங்ஙனமே பிறபல கிராமத்தொழி லாளரும். ஆனால் விவசாயிகள் தாழ்ந்த இடங்களில் இப்பணியாளருட் பலர் தளர்வடைந்து பட்டணங்களை நோக்கிச் சென்று இயந்திரத் தொழில்களில் ஈடுபடு கின்றனர். திருநெல்வேலி ஜில்லாவில் கங்கைகொண் டான் என்ற கிராமத்தின் பொருளாதார நிலைமையை நான் ஆராய்ந்தபோது நெசவாளரின் சந்ததிகளிற் பலர் ஊரைவிட்டுப் போய் அடுத்துள்ள பாபநாசம்,

தூத்துக்குடி முதலிய பட்டணங்களிலிருக்கும் மில்களில் வேலை செய்வதாகத் தெரியவந்தது.

இரண்டாவது வகையாகிய வேலைப்பாடமைந்த பண்டங்களை உற்பத்தி செய்யும் தொழிலாளர் தேசத்துக்கே ஒரு தனிச் சிறப்பை அளிப்பவர்கள். பிரான்சு தேசத்தின் பொருளாதார வளர்ச்சிக்கு இவ்வகையான தொழிலாளரே இன்றும் கருவியாயுள்ளார்கள். அவர்கள் கைத்திறன் நாட்டின் புகழுக்கு வற்றாத ஊற்று. அப்படிப்பட்டவர்கள் இன்று வருந்தத்தக்க வறுமையால் வாடியிருக்கின்றனர். கூலி குறைவு; சுற்றுச்சார்பு அருவருப்பானது; தரகர் கொடுமை மிகுதி; அறியாமை நிறைந்திருக்கிறது. இந்த நிலையிலுள்ளவர்களைச் சீர்திருத்துவதற்குக் கல்வி அறிவோடு பொருளாதார நலமும் பிறக்கவேண்டும். அரசாங்கத்தின் விசேஷப் பேணுதலின்றி இந்தத் தொழில்கள் மீண்டும் தலையெடா. பயன் ஒன்றையே கருதி அரசாங்கம் இவற்றைப் பேண முன்வருமாயின் ஏமாற்றமாகவே முடியும். எழில் மிகுந்த பண்டங்களை ஆக்கும் இத்தொழில்கள் அழியுமாயின் நாட்டின் புகழுக்கும் இழுக்காகுமென்பதை அரசினர் அறியவேண்டும்.

மூன்றாவது வகையான நெசவுத் தொழிலாளரின் நிலைமை முன்னே பல இடங்களில் எடுத்து விளக்கப்பட்டிருக்கின்றது. பருத்தி, பட்டு, உரோமம்,

ஆகிய மூன்று துறையிலுமுள்ள கைத்தறியாளர் நிலைமை கவலைக்கிடமாயிருக்கின்றது. அவர்கட்காக அரசாங்கம் வேண்டும் முயற்சிகளை மேற்கொண்டால்தான் நாட்டுத் தொழில் விரைந்து வளரும். அரசாங்க உதவியோடு 'தன்கையே தனக்குதவி' என்ற கொள்கையுடைய கூட்டுறவு இயக்கத்தின் உதவியும் வேண்டும். நெசவுத் தொழிலைப்போல் இன்னும் எத்தனையோ குடிசைத் தொழில்கள் தள்ளாடிக்கொண்டிருக்கின்றன. போதிய முன்பணமில்லாமலும், விற்பனைமுறை தெரியாமலும், குடத்துள் அகப்பட்ட விளக்குப்போல் இத்தொழிலாளர் உழைப்பும் முயற்சியும் விளம்பரமுமின்றி நாளடைவில் மழுங்கி விடுகின்றனர். அரசாங்கம் சென்ற சில ஆண்டுகளில் கைநெசவுத் தொழிலுக்கு மானியம் வழங்கி ஆதரித்து வந்தது. ஆனால் கைநெசவே அன்றி வேறு எத்தனையோ தொழில்கள் நாட்டில் மழை முகங்காணாத பயிர்போல் ஏங்கி நிற்கின்றன. இவற்றைப்பற்றிய சரியான விசாரணையும் நடைபெறவில்லை. சென்னை மாகாணம் ஒன்றிலேதான் திரு. நாராயணராவ் என்பவரின் அறிக்கை அரசாங்கத்தாரின் விசாரணைக்கு அறிகுறியாக நிற்கின்றது. குடிசைத் தொழில்களில் 1921-லிருந்து அதிகக் கவலை கொண்டுள்ள காந்தி அடிகளும் நூல்நூற்றல் ஒன்றைத்தவிர பிற தொழில்களின் வளர்ச்சிக்குத் தகுந்த முயற்சிகளை மேற்கொள்ளவில்லை.

குடிசைத் தொழில் வளர்ச்சியால் சாந்தமும் சமாதானமும் கலந்த ஒரு புது மனோபாவம் தோன்றிவிடும் என்று காந்தியடிகள் மெய்யாக நம்புகின்றார். குடிசைத் தொழில்களால் பொருளாதார நிலைமை மேம்பாடடைந்தால்தான் அவற்றிற்கு ஆதரவு வரும். 'இயந்திரத் தொழில் வளர்ச்சியால் மட்டும் நம் பொருளாதாரப் பிரச்னை தீர்ந்துவிடப் போவதில்லை; சிறு தொழில்களும் சேரத் தோன்றி பக்க பலமாக இருந்தால்தான் நாடு முன்னணியில் வரும்; விவசாயமும் ஜனத்தொகையும் மிகுந்த இந்தியாவுக்கு இதுவன்றி வேறு வழியில்லை' என்னும் பொருளாதாரக் காரணங்களே குடிசைத் தொழில்களுக்கு நிலையான ஆதரவு தேடவல்லன. இயந்திரத்துக்கும் குடிசைத் தொழிலுக்கும் இகல் இல்லை. இந்தியப் பொருளாதார நிலையில் இரண்டும் ஒன்றை யொன்று தழுவி நிற்பதே முறை.

# முன்னும் பின்னும்.

இதுகாறும் வகுத்துரைத்தவற்றை ஒருவாறு தொகுத்துக் கூறுவோம்

இந்திய நாட்டுக்குத் தொழில் வளர்ச்சி இன்றியமையாதது. அதனால் வரும் நன்மைகள் எண்ணில. விவசாயத்துக்கும் தொழிலுக்கும் இகல் இல்லை. "உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்" என்று பாரதியார் பாடியது இதை எண்ணியே போலும். இயந்திரத் தொழில் வளர்ச்சியால் நாட்டிலே புது நாகரீக மனப்பான்மை பிறக்கிறது. இது கோடி கொடுத்தும் கொள்ளுதற் குரியது.

பெருந் தொழில் வளர்ச்சிக்கு உரிய மூலப் பொருள்கள் பெரும்பாலும் நாட்டகத்தே குறைவற இருக்கின்றன. இல்லாத ஒரு சிறு மூலப்பொருள் களை இறக்குமதி செய்துகொள்வது எளிதாகும். அவ்விதமே மேலைநாடுகள் செய்து வருகின்றன. "நாடென்ப நாடா வளத்தன" என்ற வள்ளுவரின் இலட்சியத்தை இன்றைய உலகத்தில் எய்தும் தேசம் எதுவுமில்லை.

தொழில் வளர்ச்சி பெறுவதற்கு வேண்டிய தொழிலாளருக்கும் இந்தியாவில் குறைவில்லை. ஆனால் ஏனைய நாடுகளை ஒப்பிடும்போது இந்தியத் தொழிலாளர் திறம் குறைந்தவரா யிருக்கின்றனர்.

குறைந்த கூலி, நெடுநேர வேலை, இருப்பிட வசதி யின்மை, ஆள் திரட்டும் தரகர் கொடுமை முதலியன அவர்கள் திறனுயர்வதற்குத் தடையாயிருக்கின்றன. தொழிலாளரின் அறியாமையும் மூடப் பழக்கங் களும் பிற காரணங்களாகும். ஆலைச் சட்டங்கள் நிறுவி அரசாங்கம் பல சீர்திருத்தங்களைச் செய்துள் ளன. ஆயினும் முதலாளிகளின் இணக்க மனப் பான்மை அதனிலும் முக்கியம். தொழிலாளர் சங் கங்களை முதலாளிகள் ஆதரிக்க வேண்டுமே ஒழிய நசுக்கலாகாது. நோய்க் கால நிதி திரட்டவும், வேலையில்லாக் காலத்து உதவுதற்குரிய நிதி திரட்ட வும், இருக்கை வசதிகள் அமைத்துத் தரவும் முதலாளிகள் அரசாங்கத்தோடு கலந்து ஆவன செய்ய விரையவேண்டும். "எதிரதாக் காக்கும் அறி வினார்க் கில்லை, அதிர வருவதோர் நோய்" என்பது வள்ளுவர் வாக்கன்றோ?

தொழில் வளர்ச்சிக்கு வேண்டிய முதலுக்கும் நாட்டில் குறைவில்லை. ஆதியில் இந்தியர் இந்தத் துறையில் இறங்காமையால் வெள்ளையர் முதலைக் கொண்டு இந்தியத் தொழில்கள் பல தலையெடுத்தன. வெளிநாட்டு முதலால் விளைந்த நன்மை பல வாயினும் தீமையும் சொற்பமன்று. அண்மையில் இந்தியர் பலர் தொழில் துறைகளில் முன்னிலும் அதிகமாக முதலை முடக்க முனைந்துள்ளார்கள். ஆயினும் நகைப்பித்தும், நம்பிக்கையற்ற கம்பெனி

நிர்வாகமும் நீங்கும் வரை செல்வ நங்கை நாணியே நிற்பாள்.

ஏனைய நாடுகளில் தொழில் வளர்ச்சி கருதி அரசாங்கம் நேராகவோ மறைமுகமாகவோ தொழிற் பாங்கிகளைத் தோற்றுவித்துள்ளன. இந்தியாவில் தொழில் வளர்ச்சிக்கு இதுவரையும் காரணஸ்தராயிருந்தவர் "மானேஜிங் ஏஜன்ஸி" என்று சொல்லப்படும் ஒரு சில முதலாளிக் குழுவினரே ஆகும். இந்த முறையால் பல தீமைகள் விளைந்துள்ளன. ஆங்கிலேயர் "மானேஜிங் ஏஜண்டு" களாயிருந்த தொழில்களில் பல வாறான நன்மைகளே பிறந்துள்ளன என்பது டாக்டர் லோகநாதன் தமது நூலிற் கண்டுள்ள அரிய உண்மையாகும். எங்ஙனமாயினும் ஒரு காலத்தில் "மானேஜிங் ஏஜன்ஸி" முறையால் தொழில் வளர்ச்சி அடைந்ததென்பதையும், இன்று அது பொருந்தாததோர் அமைப்பு என்பதையும் அறிஞர் ஒப்புக்கொள்கின்றனர். எனவே அரசாங்கம் நேராகவோ மறைமுகமாகவோ தொழிற் பாங்கிகளைத் (Industrial Credit Corporations) தோற்றுவிக்கவேண்டும்.

அரசாங்க ஆதரவினாலேதான் தொழில்கள் தழைக்கும். தொழில் முன்னேற்றமடைந்துள்ள நாடுகளின் சரித்திரமெல்லாம் இந்த உண்மையையே அறுதியிட்டுரைக்கின்றன. இந்தியாவில் கம்பெனியார் ஆட்சிக் காலத்தும், அதன் பின்னரும்

இந்தியத் தொழில்களிடம் அரசாங்கம் பராமுகமாயிருந்தது. சில வேளைகளில் ஆங்கிலேய முதலாளிகளின் முறையீட்டுக்குச் செவி சாய்த்து இந்தியத் தொழிலுக்கு இடர் விளைத்ததுமுண்டு. கர்ஸன் பிரபுவின் ஆட்சிக் காலத்தில் ஒரு சில நன்முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டாலும், இந்தியா மந்திரியான மார்லி பிரபு அதற்கு எதிரிடையாக நின்றார். சென்ற யுத்தகாலம் வரையிலும் உருப்படியான உதவி எதுவும் அரசாங்கத்தால் இந்தியத் தொழிலுக்கு உண்டாகவில்லை.

யுத்தகாலத்தில் சில முக்கியமான தொழில்கள் தலையெடுத்தன. அதன் பின்னர் இந்திய அரசாங்கத்துக்கு வரி நிர்ணயச் சுதந்திரம் (Fiscal Autonomy) வந்தது. அதன் பயனாக டாரிப் போர்டு நிறுவிப் பல தொழில்களின் நிலைமையைக் கண்டறிந்து அவற்றை வளர்க்கும் பொருட்டு ஆய்ந்த காப்பு முறை (Discriminate Protection) என்ற இறக்குமதி வரி சுமத்தும் உபாயம் மேற்கொள்ளப்பட்டது. இதனால் நாட்டின் உயிர்நாடி போன்ற பல முக்கியமான தொழில்கள் தழைத்து ஓங்கிவிட்டன.

ஆயினும் இரட்டை ஆட்சிக்காலத்தில் நிதிப் பொறுப்பில்லாத மாகாண மந்திரிகளிடம் தொழிற் பொறுப்பு ஒப்படைக்கப்பட்டது. வலிமை மிகுந்த ஒரு மத்திய அரசாங்கம் செய்ய வேண்டிய வேலையைப் பொருள் வலியற்ற மாகாண மந்திரிகளிடம்

கொடுத்த முறையினுல் நாட்டுத் தொழில் விரைந்த வளர்ச்சியை அடையவில்லை. 1935-ல் ஏற்பட்ட புதுச் சீர்திருத்தத்தால் இந்தக் குறைபாடு நீங்கி விட்டது. ஆனுல் சென்ற ஐந்தாண்டுகளில் நிகழ்ந்த அரசியல் நெருக்கடியிலே தொழில் வளர்ச்சி கருதி நிலையான வேலை எதுவும் நடைபெறவில்லை. "ராஜிநாமாக் கடிதத்தை எப்பொழுதும் சட்டைப் பையிலே போட்டுக் கொண்டிருந்த ஒரு கட்சி" நெடுங்காலத் திட்டங்களை எவ்விதம் மேற்கொள்ளக் கூடும்?

இங்ஙனமாக, இந்தியத் தொழில் வளர்ச்சி சமீப காலத்தில் ஏற்பட்டதேயாகும். அதற்கும் எத்தனையோ பாலப்பிணிகள். எல்லாவற்றையும் ஒரு வாறுகக் கடந்து சில முக்கியமான தொழில்கள் தலையெடுத்துள்ளன. பருத்தி, பட்டு, உரோமம், சணல் முதலிய பொருள்களை நெய்யும் கைநெசவு, மில் நெசவுத் தொழில்கள், அடிப்படையான நிலக்கரி, எஃகு, இரும்பு, சிமிட்டி போன்ற முக்கிய தொழில்கள், காப்பி, தேயிலை போன்ற தோட்டத் தொழில்கள், தீக்குச்சி, காகிதம், சர்க்கரை முதலியன செய்யும் ஏனைய தொழில்கள் — இங்ஙனம் பல சிறந்த பெருந்தொழில்கள் இந்தியாவில் நல்ல முறையில் தலையெடுத்துவிட்டன.

இந்தப் பெருந்தொழில்களால் மட்டும் நாட்டின் பொருளாதார நிலைமை உயர்ந்துவிடாது. விவசாய

இந்தியாவுக்குக் குடிசைத் தொழில்களும் உடன் வேண்டும். பண்டைக் குடிசைத் தொழில்களிற் பல, இயந்திரத்தின் போட்டியாலும், அரசியல் குழப்பத்தாலும், தேச மக்களின் அடிமை மனப்பான்மையாலும் சென்ற நூற்றாண்டின் முற்பகுதியில் இறந்தொழிந்தன. ஆயினும் கைநெசவு போன்றன இன்னும் தத்தளித்துக் கொண்டிருக்கின்றன. புதுக் குடிசைத் தொழில்கள் பல தொடங்கவும் வேண்டும். இவற்றுக்கு அரசாங்க ஆதரவு விரைந்து வருவதோடு கூட்டுறவு முறைகளும் கையாளப்படல் வேண்டும். பொருளாதார நன்மைகளைக் கருதியே இந்தக் குடிசைத் தொழில்களை உயிர்ப்பிக்க வேண்டும். பழமை, இனிமை என்ற வெறும் உணர்ச்சி காரணமாக மட்டும் அவற்றை மேற்கொள்வது நிலையான பயனையளிக்கமாட்டாது.

* * * *

"எவ்வளவுதான் தற்கால இயந்திரத் தொழில் முறையை நாம் வெறுத்தாலும், எவ்வளவு தான் அதனால் வரும் தீமைகளைக் கண்டித்தாலும், இனி நம்மால் பழங்காலத்துக்குத் திரும்பிப் போக முடியாது. அது வீணாசை. எனவே இயந்திரத்தோடு இணங்கிச் செல்வதே நன்று" என்று ஹரிபுரா காங்கிரசின் தலைமை யுரையில் சுபாஷ் சந்திர போஸ் எடுத்துக்காட்டினார். இது முற்றிலும் உண்மை. இணங்கிச்செல்ல இசைந்தாலும் இசையாவிட்டாலும் இயந்திரத் தொழில்கள் நாட்டில் நிலைபெற்று

விட்டன. இனி அவை மேலும் வளர்ந்து செல்வதிலேயே நாட்டின் நன்மையும் மேன்மையும் இருக்கின்றன. எனவே எந்தத் தொழில்களை, எந்த அளவுக்கு, எவ்வாறு வளர்க்க முடியுமென்பதே அடுத்த கேள்வி.

இந்தியத் தொழில்வளர்ச்சி தலைகீழாகத் தொடங்கியது என்று முன்னொரு இடத்தில் குறிப்பிட்டோம். தொழில் வளர்ச்சிக்கு அடிப்படையாக வேண்டுவன இயந்திரங்கள். இந்த இயந்திர உற்பத்திக்கு இன்னும் இறக்குமதியையே முற்றும் எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறது இந்திய நாடு. இரும்பு எஃகுத் தொழில்கள் என்னதான் சிறந்தும் இயந்திரங்கள் நாட்டில் உற்பத்தி செய்யப்படவில்லை. இயந்திரங்களுக்காகவும், மோட்டார் வண்டி முதலிய பொருள்களுக்காகவும் ஏறக்குறைய 20 கோடி ரூபாய்க்குமேல் அயல் நாடுகளுக்கு ஆண்டுதோறும் இந்தியா கொடுத்து வருகிறது. இந்தத் தொகை மேலும் மேலும் பெருகிக்கொண்டேதான் போகின்றது. இயந்திர உற்பத்தி செய்வது எளிதன்று என்பது உண்மையே. அதற்கு ஏராளமான மூலதனம் வேண்டும்; கைதேர்ந்த தொழிலாள நிபுணர் வேண்டும். சாஸ்திர விற்பன்னர் பலர் வேண்டும். இவரெல்லாம் நம் நாட்டில் அருமை. ஆயினும் மனம் உண்டாயின் வழியுமுண்டு. காங்கிரஸ் கட்சி ஆட்சியிலிருந்த காலத்து இயந்திர உற்பத்தி செய்யும் ஒரு தொழிற்சாலையை அமைக்க

திரு. வி. வி. கிரி, பெரு முயற்சி செய்தார். ஸர். எம். விஸ்வேஸ்வரய்யாவைக் கலந்து யோசித்தார்கள். காங்கிரஸ் ஆட்சி நிலை பெறுமையால் அந்த முயற்சி உருப்பெறாது போயிற்று.

இயந்திர உற்பத்தித் தொழிலுக்குப் பல கோடி ரூபாய் மூலதனம் வேண்டுமாகையால் அதில் ஓரளவை வெளி நாடுகளிலிருந்து கடன் வாங்கிக் கொள்ளலாகுமென்று சிலர் கருதுகின்றனர். வெளி நாட்டு முதல் உள்நாட்டுத் தொழிலுட் பாய்ந்து அதனால் ஏற்படும் பொருளாதார ஆதிக்கம் அரசியல் உரிமைகளைப் பாதிப்பதைப் பற்றி முன் குறிப்பிட்டோம். இந்த ஆபத்தைக் கவனித்துத் தொழில் வளர்ச்சியில் ஈடுபடவேண்டும். 300 கோடி பவுன் அளவு வெளிநாட்டுக்கடனுக்காக 1935-ம் ஆண்டைய அரசியல் திட்டத்திலே எத்தனை பாதுகாப்புகள், விசேஷ அதிகாரங்கள், முக்கிய பொறுப்புகள்! இவற்றை யெல்லாம் மேலும் அதிகரிப்பதா?

எனவே, இயன்ற அளவு நாட்டிலேயே மூல தனம் திரட்டிய பின்னர் வெளிநாட்டிலிருந்து நிபுணர்களைக் கொணர்ந்து தொழிலைத் தொடங்க வேண்டும். நாளடைவில் இந்தியர்களே நிபுணர்களாகி விடுவார்கள். இதற்காக அரசாங்க உதவி 'ஒல்லும்வாயெல்லாம் ஓவாது' பெறல் வேண்டும்.

உரோம நூல், உரோம ஆடை, ரப்பர்ப்பொருள்கள், கண்ணாடிச் சாமான்கள், சாயப்பொருள்கள்,

வர்ணங்கள், இரசாயனப் பொருள்கள் முதலிய சிலவற்றை நாம் இன்னும் பெருவாரியாக இறக்குமதி செய்துகொண்டுதானிருக்கின்றோம். இவற்றுக்காக ஆண்டொன்றுக்கு ஏறக்குறைய 20 கோடி ரூபாய் வெளிநாடு செல்கின்றது. இப்பண்டங்களை நாட்டில் உற்பத்தி செய்ய இயலும். இப்பொருள்களிற் பலவற்றைச் செய்யும் தொழிற்சாலைகள் சில இந்தியாவில் இயல்பாகவே தோன்றியுள்ளன. அவற்றைப் பெருக்கிக் குறை நிரப்புவதே அடுத்த வேலை. இவையுந்தவிர, சிறியனவும் பெரியனவு மாகப் பல தொழில்கள் ஆங்காங்கே தொடங்கக் கூடும். இவற்றின் விரிவை ஸர். எம். விஸ்வேஸ் வரய்யாவின் அரிய நூலிற் காணலாம்.

பெருந்தொழில்களைத் தோற்றுவிப்பது அரிய தொரு செயலே. அவற்றை நிலைபெறத் தழைக்கச் செய்வது அரிதினும் அரிதே. தோன்றிய தொழிற்சாலைகள் நிலைபெற்று ஓங்க வேண்டுமானல் அவற்றில் உற்பத்தியாகும் பண்டங்கள் விரைவில் விற்பனையாக வேண்டும். இயந்திரத் தொழில்களில் பெருவாரியான உற்பத்தி நடைபெறுகின்றது. உற்பத்திக்கேற்ப விற்பனையும் இருந்தால்தான் ஓய்வின்றி சோர்வின்றி இயந்திரத் தொழில்கள் நடைபெறக்கூடும். எனவே, பண்டங்களை வாங்கக் கூடிய மக்களின் தொகை எந்த நாட்டில் மிகுந் திருக்கின்றதோ அங்கு தொழில் வளர்ச்சியும் எளி தில் ஏற்படும்.

இங்கிலாந்து, ஜப்பான் முதலிய தேசங்களில் ஜனத்தொகை குறைவு; இயந்திர வளர்ச்சி அபரிமிதம். எனவே வாங்குவோரை வசமாக்க இதர தேசங்களை நாடவேண்டி இருக்கிறது. அந்தத் தேசங்களை என்றும் தம்மிடமே வாங்கச் செய்யும் நோக்கத்தோடு அவற்றின் அரசியல் உரிமைகளைக் கைப்பற்ற வேண்டியதாகி விடுகிறது. உலகப் போரும் சாம்பிராஜ்ய யுத்தங்களும் சந்தைக்காக ஏற்படும் சண்டைகளே.

பெருவாரியான ஜனத்திரளைக் கொண்ட தேசங்களுக்கு இந்தக் கவலை வேண்டியதில்லை. உள்நாட்டுச் சந்தையே அவர்களுக்கு உகந்த சந்தையாய் அமைந்துவிடும். இன்றியமையாத ஒரு சில பொருள்கள் தவிர ஏனையவற்றை நாட்டகத்தே தோற்றுவித்து, நாட்டகத்தே விற்று நலமுற வாழலாம். ஐக்கிய அமெரிக்கா, ஐக்கிய சோவியத் ரஷ்யா போன்ற தேசங்கள் இந்தப் பெருமையை உடையன. இவற்றோடு இந்தியாவின் நிலைமையும் ஒருபடியில் வைத்தெண்ணற் குரியது.

நாற்பது கோடி மக்கள்—உலக ஜனத்தொகையில் ஐந்திலொரு பங்கினர்—இந்தியாவில் வாழ்கின்றனர். உலகப்படத்தில் உள்ளங்கை அளவான தேசமோ இந்தியா? தன்னுள்ளே பலவும் அமைந்து நிறைந்த ஒரு தனிக் கண்டமன்றோ? ஆனால் நாற்பது கோடி மக்களிருந்தும் என்ன பயன்? அவர்கள் மக்களாகவா இருக்கின்றார்கள்? சீரழிக்கும்

வறுமைக் குழியில் ஆழ்ந்துள்ளார்கள். பிணி, பசி முதலியன அவரை உடற்றுகின்றன. இன்றி யமையாத துணி, தீக்குச்சி, மண்ணெண்ணெய் போன்ற பொருள்களைத் தவிர பெருவாரியான தொழிற்பண்டங்களை வாங்குதற்கு வகையில்லை. ஒரு இந்தியனுடைய சராசரி வருஷ வருமானம் 80 ரூபாய்க்கு மேலில்லை. சில மேலை நாடுகளில் 1,000 ரூபாய்க்கு மேல் வருமானம் வருகிறது. வருஷம் முழுவதும் ஒரு இந்தியன் சராசரி உடுத்து வது 15 கஜம் துணிதான்.

இந்த நிலையில் இந்திய மக்களின் பொருளாதார நிலைமை உயர்ந்தாலொழிய இந்தியத் தொழில்கள் நிலையான வளர்ச்சியையும் செழிப்பையும் எய்த முடியாது. முதலாளி மாரிபத்திலிருக்கும் தற்காலத் தொழிலுலகில் அடிக்கடி பொருளாதார மந்தங் களும் வியாபார மந்தங்களும் ஏற்படுவதற்கு இதுவே காரணம். வாங்குகிறவர்களுக்கு வாங்கும் சக்தி அளியாத முதலாளித் தொழில்முறை தன்னையே அழிக்கும் கருவைத் தன்னுள்ளே தாங்கி நிற்கின்றது என்பது பொதுவுடைமை ஞானியாகிய கார்ல் மார்க்ஸ் கண்ட அரிய உண்மை.

இந்திய மக்களின் வாங்கும் ஆற்றலைப் பெருக்கு வது எவ்வாறு? அது பெரியதோர் பிரச்னை. இந்தியப் பொருளாதாரச் சீர்திருத்தத்தின் அடிப் படையான பிரச்னையும் அதுவே. அதுபற்றி

விரிவாகக்கூற இந்நூல் இடந்தராது. பெரும்பாலான மக்கள் விவசாயிகளாயிருக்கின்றனர். கடன் வலையில் சிக்கிக் கிடக்கின்றனர். முற்போக்குக்கு ஒவ்வாத உழவு முறைகளைக் கையாண்டு வருகின்றனர். பிற் போக்கு நெறியில் நின்றும் மீளாது தடுக்கும் மூடப் பழக்கவழக்கங்களால் கட்டுண்டு கிடக்கின்றனர். விவசாய மக்களை நீக்கமறப் பிணிக்கும் நிலவரி முறை, நில உரிமை முறை மாறாது நிலவுகின்றன. விளைபொருள்களுக்கு ஏற்ற விலைபெறாது எங்கும் தரகர் கொடுமை தாக்குகின்றது. விவசாயிகள் நிலைமையினும் வேறுபட்டதன்று தொழிலாளர் நிலைமை.

'உண்டவனே உரஞ்செய்வான்,' என்பது பண்டை மொழி. வாங்கும் ஆற்றல் பெற்ற மக் களைக்கொண்ட நாட்டிலேதான் வளம்பெறு தொழில்கள் செழித்தோங்கும். விவசாயம், தொழில், கூட்டுறவு, விற்பனைமுறை, நில உரிமைமுறை, பாங்கி அமைப்பு, போக்கு வரவு சாதனம், வாணிபம், கல்வி, கலை, அரசியல் முதலிய நானாவிதத் துறைகளிலும் ஒருங்கே பெருஞ் சீர்த்திருத்தங்கள் ஏற்பட வேண்டும். இவை அனைத்தும் தேசமாகிய யாக்கையின் வெவ்வேறு உறுப்புகள். நிலையான திடமான ஓர்மையான குறிக்கோளில்லாத குறை யாலேயே இன்று இந்தியத் தொழிலின் வளர்ச்சி குடுகுடுப்பைக்காரன் சட்டைபோல் நிரலற்றதா யிருக்கின்றது. பல்வேறு துறைகளையும் பருந்தொக்க

ஒருங்கு நோக்கி, திட்டம் வகுத்துத் திறமான தொழில் முறையை மேற்கொள்ள வேண்டும். திட்ட வேலையே திடவேலை. "அரங்கின்றி வட்டாடுதல்" அறியாமை அன்றோ?

திட்டப் பொருளாதாரம் (Planned Economy) என்ற முறை சில ஆண்டுகளாக மேலை நாட்டில் பல தேசங்களில் மேற்கொள்ளப்பட்டு வருகின்றது. குறித்த காலத்தில், கொண்ட இலட்சியத்தை, வரையறுக்கப்பட்ட முறையில் நண்ணுவதே திட்டப் பொருளாதாரத்தின் கொள்கையாகும். இதனைக் கைக்கொண்டே சமீப காலத்தில் ஏனைய நாடுகள் இயல்பான போக்கில் நூற்றாண்டுகளில் அடைந்த தொழில் வளர்ச்சியை ரஷ்யா, ஜெர்மனி முதலிய தேசங்கள் பத்தாண்டுகளில் பெற்றுள்ளன. இத்தகைய திட்டப் பொருளாதாரம் ஜனநாயகம் வழங்கும் தேசங்களுக்கு ஒவ்வாது என்பர் ஒரு சாரார். மாறா லட்சியமும் விடா முயற்சியும், முரணில்லா மனப்பான்மையும், தந்நயம் பேணாத் தியாகங்களும் நிரம்ப இருந்தால் எத்தேசத்திலும் அது இயலுமென்பதே எமது துணிபு. தொழில் வளர்ச்சித் துறையில் ஒருமைப்பட்ட மனப்பான்மை வேண்டுமென்பதைக் கருதி ஸ்ரீ ஜத் சுபாஷ் சந்திர போஸ் எல்லா மாகாணங்களிலும் உள்ள தொழில் மந்திரிகளையும் ஒன்று கூட்டிக் கலந்தார். அதன் பயனாக பண்டித ஜவஹர்லால் நேரு தலைமையில் தேசியத் திட்டக் கமிட்டி (National Planning Committee)

என்ற ஒரு ஸ்தாபனம் காங்கிரசின் ஆதரவில் தோன்றியிருக்கிறது. அதற்கு மாகாண அரசாங்கங்களும், சமஸ்தான அரசாங்கங்களும் பொருளுதவி அளித்துள்ளன. பல நிபுணர்கள் ஆலோசனை கூறி உதவி செய்திருக்கிறார்கள். பல துறைகளில் அவர்களின் முடிபுகள் அறிக்கைகளாக வெளிவந்துள்ளன.

நம் தாய் நாட்டையும், சமூக நீதியையும், உலக சமாதானத்தையும் உலைக்கின்ற தற்காலக் கொடும் போர் நின்றதும் இந்திய அரசாங்கம் திட்டப் பொருளாதாரத்தை மேற்கொள்ள வேண்டும். இந்த யுத்தத்தினால் ஒரு சில தொழில்களுக்கு நன்மை உண்டாகலாம். முக்கியமான இயந்திரங்கள் வாராததால் ஒரு சில தொழில்களுக்கு ஊனம் உண்டாகலாம். தழைக்கும் தொழில்களை மேலும் தழைக்கவும், தளரும் தொழில்களைக் கைதூக்கவும் மத்திய அரசாங்கத்தின் சார்பாக வர்த்தக மெம்பர் சர். ராமசாமி முதலியார் அரும் பாடு பட்டுவருகிறார்கள். இழந்த ஐரோப்பிய சந்தைகளுக்கு இடாக ஏனைய சந்தைகளைப் பற்ற முயற்சிகள் நடைபெறுகின்றன. இம் முயற்சிகளை யுத்தம் நின்ற பின்னும் தொடர்ந்து நடத்தி விடுதலைபெறும் புது இந்தியாவிற்கு உகந்த திட்டப்பொருளாதாரத்தை வகுப்பது தேசத்தலைவர்கள் கடமையாகும்.

Printed at the Hilal Press, Tirunelveli —6–'44,